

ஸ்ரீராமஜெயம்



# சொலல் வல்ல அனுமன்

தொகுப்பு :
வீராபுரம் சம்பத் தீக்ஷிதர்

ஸ்ரீராமஜெயம்

# நூன்முகம்

ஒரு ஸமயம் அடியேன் சென்னை தொலைக்காட்சி நிலைய ஒளிபரப்பிற்காக சென்னைப் பல்கலைக் கழக (தமிழ்த்துறை) திரு. சி. பாலசுப்ரமணியனார் அவர்களை கலந்து உரையாடல் நிகழ்ச்சியில் பங்கெடுக்கச் சென்றேன். அவ்வமயம் "நீ யார்?" என்ற தலைப்பில் ஒரு சிறிய கட்டுரை எழுதிக் கொண்டு போனேன். அதைப்படித்த சி. ப. அவர்கள் இது சிறிய நூலாக வரவேண்டும் என்று தன் விருப்பத்தைச் சொன்னார். அந்தக் கட்டுரையின் விரிவாக்கமே இச்சிறிய கையேடு. கம்பனை படம் பிடித்துக் காட்டுவதில் தமிழறிந்த நெஞ்சங்களுக்குத் தனி இடம் உண்டு. அந்த நம்பிக்கையில் இந்த நூலை நாம் வெளியிடுகிறோம்.

நீ யார்? என்று அனுமனிடம் எம்பெருமான் இராமன் கேட்டார். நீ யார்? என்று அனுமனிடம் ஸீதா பிராட்டியார் கேட்டாள். நீ யார்? என்று அனுமனிடம் இராவணன் கேட்டான். இந்த மூவரின் கேள்வி ஒன்றுதான் என்றாலும் மூன்று மாறுபட்ட விதங்களில் பதில் அளித்திருக்கிறான் அனுமன். அப்படி பதில் அளித்ததற்கான காரணங்கள் இந்நூலில் தெளிவாக வரையப்பட்டுள்ளது.

காலம், இடம் கருதி சொல்லப்பட வேண்டியதை சுருக்கமாக சொல்லல், குறிப்பால் உணர்த்துதல் போன்றவைகளும் இதில் காணலாம்.

சுருக்கமாக "சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது".

என்ற திருக்குறளுக்கு ஓர் சரியான எடுத்துக்காட்டு பாத்திரம் கம்பனின் அனுமன்.

எனவே அவன் சொலல் வல்ல அனுமன்

ஆசிரியர்

நாள் : புரட்டாசி கேட்டை.

ஸ்ரீ ராமஜெயம்

# சொலல் வல்ல அனுமன்

**ஓர் ஆய்வு ஏடு - ஆய்வாளர் : வீராபுரம் சம்பத்தீக்ஷிதர்**

பாரதியார் பைந்தமிழ்ப் புலவர்களைப் பாடுங்காலையில் யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கனுமே பிறந்ததில்லை உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை என்று பாடினான். மொழிகளில் தேனினும் இனியது தமிழ்மொழி எனின் கவிகளிலே கம்பனின் கவியும் அத்தகைத்தே. கம்பனின் கவிதை வரிகள் கற்றவர் நெஞ்சம் விரும்பும் கனியமுது. கம்பன் படைத்த காவியச் சோலையில் காலமெலாம் நின்று மணந்தரும் கற்பக மலர்கள் ஏராளம். அறம் வளர்த்த நம்பி ராமன், திறன் காட்டும் இளவல் இலக்ஷ்மணன் மனத்திண்மையும் தவமும் கற்பும் குடிகொண்ட காவிய நாயகி சீதை, அண்ணல் அடிச்சுவட்டைப் பற்றிய பண்புடைய பரதன், அண்ணனையன்றி எதையுமே கருதா அறிவுடை நம்பி சத்ருக்னன் இப்படி பலர். அவர்களுள் அறிவிற்கோர் தாயகமாய், அருளுக்கோர் நாயகமாய், வன்மைக்கோர் வாயுவென, மனத்திண்மையும், நன்மையில் நாட்டமும் கொண்ட சொலல் வல்ல நம்பி அனுமன், கம்பன் படைப்பில் ஓர் அற்புதம். அவன் தன் சொல்லாற்றலைக் காட்டுவதே இந்நூலின் இலக்கு.

கம்பன் அனுமனை அறிமுகப்படுத்தும் இடம் கிஷ்கிந்தா காண்டம். அனுமன் பெருமை பரவிக்கிடக்குமிடம் சுந்தரகாண்டம். இந்த இரண்டு காண்டங்களில் கம்பன் காட்டிய அனுமனின் சொல்லாற்றல் புலவர்க்கோர் வழிகாட்டி, பேச்சாளர்க்கோர் முன்னோடி, சிந்தனையாளர்க்கோர் சிறப்புக் களஞ்சியம். இனி நூலினுள் செல்வோம்.

காலத்தின் சூழற்சியிலே கைபிடித்த மனைவியவள் பிரிவதனால், கவலை மிகக் கொண்டவனாய்க் காடெல்லாம் தானலைந்து, காணுகின்ற பொருளெல்லாம் கற்புடையாள் கனிமுகமும், செவ்வாயும்,

கண்ணசைவும், காலடியும், கன்னக்குழிவும், கன்னலமுதாம் கவின் சிரிப்பும் கருத்தில் எண்ணி, கண்ணீர் சிந்தி, அவளல்லது வாழ்வு இல்லை என்ற நிலையில் ஒரு தாரம் என்ற உயர்நிலையில் வாழும் ராமன் கிஷ்கிந்தையின் பக்கம் வருகிறான். இலக்குவனால் தேற்றப்பட்டவனாய். அந்நாயகன் நாயகிபால் கொண்ட நலமார் காதலை நாமறியச் செய்யும் கம்பன் வரிகள்

*அலக்கண் உற்றேற்கு உற்றுதவற்கு அடைவு ஒன்று உண்டே கொடிவள்ளாய்*
*மலர்க் கொம்பனைய மடச்சீதை காதே மற்றொன்று அல்லையால்*
*பொலக் குண்டலமும் கொடுங்குழையும் புனைதாழ் முத்தின் பொற்றோடும்*
*விலக்கி வந்தாய் விளம்பாதே இன்னும் பூசல் விரும்புதியோ*

“வந்தவரை யெல்லாம் மகிழ்விக்க வந்த வள்ளைக் கொடியே என்னைப் பொறுத்தவரையில் உன் முயற்சி பலன் தராதே. நான் உற்ற அல்லலுக்கு உதவக்கூடியது ஒன்றே ஒன்றுதான். அது என் கண்ணுள்ளும், கருத்துள்ளும் நிலை பெற்றவளாம், பல மலர்கள் நன்கமைந்த ஓர் மென்மைப்பூங்கொடி சீதைதான்” என்றெல்லாம் கூறாமல் கூறிவரும் ராமன் சபரியவள் தானளித்த சலமில்லாச் சுவைசேரும் கனி உண்டு, அவள் உரை கேட்டு, சுக்ரீவன் உறைகின்ற ரிஷியமூக மலையின் பக்கம் வருகிறான் இளையவன் தொடர.

அவர்கள் வருகின்ற நிலைகண்டு வாட்டமிகக் கொண்டவனாம் சுக்ரீவன் மாற்றமிலா மனத்தினனாம் மாருதியைத் தானழைத்து “மாருதி அதோ இருவர் வருகின்றனரே ஒருவேளை அவர்கள் வாலியின் ஏவலினால் வருகின்றனரோ? அவர்கள் யாரென அறிந்துவா” என்று அனுப்பினான். ஓர் பிரம்மசாரியாய் தன் உருவை மாற்றிக் கொண்ட அனுமன் இராம இலக்குவர்கள் வருகின்ற இடம் நெருங்க, நெருங்க அவன் உள்ளத்தில் உதிக்கின்ற எண்ண அலைகள்.

யார் இவர்கள்! தேவர்களின் தலைவர்களாய்ப் பேசப்படுகின்ற மூவராம் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர்களா! அப்படியென்றால் மூவரல்லவா இருக்க வேண்டும். இவர்கள் இருவர்தானே. மூவராயின் அவர்களுக்கே உரித்தான தாமரை, சூலம், சங்கு, சக்கரங்கள்

இவைகள் காணப்பட வேண்டும். இவர்கள் நிமிர்ந்த வில்லினை உடையவர்களாக அல்லவா வருகிறார்கள். இவர்களுக்கு ஒப்பானவர்கள் யாரும் இல்லையே. இவர்கள் எதையோ தேடிக் கொண்டல்லவா வருகிறார்கள். இவர்களுக்கு அரிய ஒன்று இவ்வுலகில் எது? இவர்கள் இப்படி நடந்து வரும் நிலை எப்படி ஏற்பட்டது? இவர்கள் சிந்தையில் ஏதோ துயரம் உள்ளது போல் தோன்றுகிறதே? மற்றவர்கள் போல் இவர்கள் எளிதில் துயரம் அடைபவர்களாகவும் தெரியவில்லையே? இவர்கள் பொறுமையையும், அறத்தையுமே பெருமையாகக் கொண்டவர்கள் போல் தோன்றுகிறார்களே. இவர்கள் தேடிக்கொண்டு வருவது தருமமாகத்தான் இருக்க வேண்டும்" என்றெல்லாம் எண்ணமிட்டவனாய் வரும் அனுமன் மேலும் எண்ணுகிறான்.

"பொறாமையற்றவராய், கருணையின் கடலாய்க் காண்கின்ற இவர்களுக்கு நல்லது தவிர வேறெதுவும் தெரியாது போல் இருக்கிறதே. தேவேந்திரன் அஞ்சுகின்ற நிலைமையர். தரும தேவதை அஞ்சுகின்ற வாழ்வு உடையவர் போலும். மன்மதன் இவர்களைக் கண்டால் அவன்தன் அழகு தோற்றுப் போயிற்றே என்று எணும் அழகுடையவர்கள். இவர்கள் வில்பிடித்து நிற்கும் பாங்கினைப் பார்த்தால் யமனையே அச்சம் உறச் செய்யும் வீரர்கள் போல் தோன்றுகிறதே" என்றெல்லாம் சிந்தையில் எண்ணுகிறான்.

அதுவோ மலைப்பகுதி. அங்குள்ள காடுகளில் மரங்கள் அதிகம். அம்மரச் சோலைகளில் பறவைகள் தங்கி வாழ்தல் இயல்பு. அவை விண்ணிலே பறந்து திரிவதும் இயல்பு. அவ்வனத்தின்கண் வீசுகின்ற காற்றால் மரங்களின் கிளைகளும் அசைந்து, அலை எழுவதும் இயல்பு. அம்மலைப் பகுதியின்கண் கூடும் மேகக் கூட்டங்கள் மரங்களின் ஊடே எழுந்த குளிர்காற்றால் நீர்த்திவலைகள் சிந்துவதும் இயல்பே. இவ்வியல்பான செயல்கள்கூட கம்பனின் அனுமன் கண்டபோது பண்புசேர் காவியமாகி விடுவதைக் கம்பனைக் கற்பவர்கள் யாரும் அறியலாம். இதோ சிலவரிகள்.

*தன் கன்று அன்ன தன்மைய தறுகண் பேழ்வாய்*
*மின் கன்றும் எயிற்றுக் கோள்மா வேங்கை என்றினையவேயும்*
*பின் சென்று காதல்கூரப் பேய் கணித்து இரங்குகின்ற*
*என் கன்று கின்றது எண்ணில் பற்பல இவரை அம்மா*

*மயில் முதல் பறவைஎல்லாம் மணிநிறத்து இவர்தம் மேனி*
*வெயிலுறற்கு இரங்கி மீதா விரிசிறைப் பந்தர்வீசி*
*எயில்வகுத்து எய்துகின்ற விண்முகில் கணங்கள் எங்கும்*
*பயில்வுறத் திவலை சிந்தி பயப்பயத் தழுவும் பாங்கர்*

*காயெரி கனலும் கற்கள் கள்ளுடை மலர்களே போல்*
*தூய செங்கமல பாதம் தோய்தொறும் இழைந்து தோன்றும்*
*போயின திசைகள் தோறும் மரனொடு புல்லுமெலாம்*
*சாய்வுறும் தொழுவ போல் இங்கிவர்களோ தருமம் ஆவார்*

கொடுமை மிக்கதும் பெரியவாயும், மின்னலும் வருந்துகின்ற பற்களை உடையதுமான வலிமைமிக்க பெரிய வேங்கை, இவர்களைக் கண்டதும் தன்கொடுமையை மறந்து வலிமை மறந்து தன்கன்றைக் கண்ட தன்மையது போல் பாசங்கொண்டு கண்ணீர் சிந்தி பின்னாலேயே செல்கின்றனவாம்.

மயில் போன்ற பறவையெலாம் நீலமேனி வண்ணன் மேனியது வாடுமென எண்ணித் தங்கள் சிறகைப் பந்தலென விரித்துக் குடைபிடிப்பது போல் செல்கின்றன. அழகிருந்து ஆடும் அவ்வனத்தின் எழிற்சுவராய் எழிலார்ந்த மேகமெலாம் எழுந்து நின்று கண்டனவாய் ராமன் வாட்டம் தீர்க்க வாசநீர் தெளித்தல் போல் நீர்த்திவலை சிந்தி பாங்கரெலாம் தழுவினவாம்.

காய்கின்ற கதிரவனால் கல்லெல்லாம் சூடேறி நிற்கின்ற நிலை தன்னிலும், கார்மேகவண்ணனவன் கால்தோயும் நேரமெல்லாம் தேன் சிந்தும் மலரெனவே மென்மை கொண்டதுவாம். வனத்தின் கண் வளராநின்ற மரங்களும், புல்லின மூங்கிலும் வள்ளலவன் வருத்தமதை மாற்றிட எண்ணி, வந்தவரை அறத்தின் உருவமென எண்ணி தங்கள் கைகளாம் கிளைகளைத் தாழ்த்தி வணங்கினவாம்.

**இராமபக்த ஹனுமான்**

இதுவரையில் பம்பையின் கரையில் ராமன் வரவால், அனுமன் கண்ட புறச் செய்திகளை எல்லாம் சொன்ன கம்பன், அதே ராமன் வருகையால் அனுமன் அகத்தில் ஏற்பட்ட ஓர் அனுபவச் செய்தியையும் ஓர் அழகான பாடலிலே கூறுவான். அப்பாடல்தான் அனுமன் இராம பக்தன் என்று நாம் எல்லோரும் புகழ்வதற்கும் காரணமாய் அமைந்தது.

*துன்பினைத்துடைத்து மாயத்தொல்வினை தன்னை நீக்கித்*
*தென்புலத்தன்றி மீளா நெறி உய்க்கும் தேவரோ தாம்*
*என்பெனக் குருகின்றது இவர்கின்றதுஅளவில் காதல்*
*அன்பினுக்கு அவதி இல்லை அடைவென்கொல் அறிதல் தேற்றேன்*

இராமனைப் பார்த்தவுடன் அனுமன் "இவரது வருகையால் என் மனதில் இதற்கு முன் இருந்த ஏதோ ஒரு துன்பம் நன்றாகத் துடைக்கப்பட்டதை நான் உணர்கிறேன். அதுமட்டுமல்ல ஏதோ ஒரு தீவினை என்னை இத்தனை நாளாக. நானே என்னைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் செய்ததையும், அத்தீவினை இவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே அகன்று விட்டதையும் உணர்கிறேன். என்னுள்ளே எழுந்த ஓர் உணர்வு இவர்கள் என்னை யமனுலகாம் தென்திசையினின்று மீட்டு என்றும் மீளாத ஓர் பக்தி நெறியை இம்மண்ணுலகம் உள்ளவரை உணர்த்தும் நிலையில் வைக்கவும் முடிவு செய்த இறைவனேயாம். இதுவரையில் நான் எத்தனையோ பேரைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் இவர்களைப் பார்த்தவுடன் என்னுள்ளே ஓர் அன்பு ஊற்றுப்பெருக்கு. அந்த அன்பினால் என் உள்ளம் உருகுகின்றது. என் உணர்வுகள், என் நாடி, நரம்புகள் ஏன் என்னுடைய எலும்பும் அல்லவா உருகும் நிலையைக் காண்கிறேன். இந்த அளவிற்கு அதிகமான அன்பு இவர்கள்பால் எனக்குள்ளதை நான் எப்படியாவது வெளிப்படுத்தி ஏதாவது இவர்களுக்காக நான் செய்தால் அல்லது அந்த அன்பு தீராது. என்ன கொடுப்பது? எதைச் செய்வது? ஒன்றுமே புரியவில்லையே" என்றெல்லாம் சிந்திக்கிறான்.

கம்பனின் அனுமன் வால்மீகி காட்டும் அனுமனிடம் இருந்து பெரிதும் மாறுபடுவதை வால்மீகி, கம்பன் இரண்டையும் ஒப்பிட்டுப் படித்தவர்கள் மட்டுமே உணரமுடியும். வால்மீகியின் அனுமனும் சொல்லாற்றல் மிக்கவன்தான். வேதங்களை நன்கு உணர்ந்தவன் என்று ராமனால் பாராட்டப்பட்டவன்தான். ஆனால் வால்மீகியின் அனுமன் சுக்ரீவன் அமைச்சனாம் அனுமனே தவிர இராமன் பால் பக்திகொண்டு அவனைத் தெய்வம் என்றே பார்த்த மாத்திரத்திலேயே உள்ளுணர்வும் அன்பும் பெருக, என்புருக நின்ற கம்பனின் அனுமன் அல்ல. ஆழ்வார்கள் போல் இராமன் பால் தானும் ஆழங்கால் படவேண்டும் என்ற கம்பனின் துடிப்பு ஒன்றுதான் ராமபக்த அனுமன் என்று அனுமனை உயர்த்தியது. அதன் வெளிப்பாடுதான் இப்பாடல்.

இப்பாறு பலபட எண்ணிய அனுமன் இராமனும், இலக்ஷ்மணனும் இருக்கும் இடம் குறுகி வரவேற்றான். அப்பாடல்,

*இவ்வழி எண்ணி ஆண்டு அவ்விருவரும் எய்தவோடும்*
*செவ்வழி உள்ளத் தானும் தெரிவுற எதிர் சென்றெய்திக்*
*கவ்வையின்றாக நுங்கள் வரவெனக் கருணை யோனும்*
*வெவ்வழி நீங்கியோய் நீயார் என விளம்பல் உற்றான்*

இப்பாடலில் வரும் சொற்றொடர் “கவ்வையின்றாக” என்பது ஓர் அற்புதமான சொற்றொடர். இராமன் அழகில் ஈடுபட்டுத் தன்னை அவனது தொண்டன் என்றும், அவன் தெய்வம் என்றும் உணர்ந்திருந்த போதிலும் அனுமன் தன் பணியையும் மறந்தான் இல்லை என்று காட்டும் சொல் அது. “நீங்கள் இந்த ரிஷியமூக மலையின் பக்கம் வருகின்ற நிலை கண்டு எங்கள் நாயகனாம் சுக்ரீவன் உள்ளத்தில் கவலை கொண்டவனாய் என்னை உம்மை நீவிர் யாவிர் என அறிந்து வர அனுப்பினான். நீங்கள் இவண் வருகின்ற நிலையால் எங்கள் தலைவன் துன்பம் இல்லாமல் வாழ வழிபிறக்க வேண்டும்” என்று வரவேற்பது போலும் உள்ளது. அதே சமயம் “நீங்கள் இங்கே வருவதால் உங்கள் வாழ்விலும் துன்பம் நீங்க வேண்டும்” என்று வரவேற்பது போலும் உள்ளது அந்த சொல்.

இதை உணர்ந்த ராமன் அனுமன் உள்ளம் தீமையையே எண்ணாத ஓர் தூய உள்ளம் என்று கண்டதால் "வெவ்வழி நீங்கியோய்" என்று விளிக்கிறான். "அப்பா நீ வரவேற்ற பாங்கிலிருந்து ஓர் பெரிய உண்மையைப் புரிந்து கொண்டேன். இங்கே இருப்பவனும் துன்பம் இல்லாமல் இருக்க வேண்டும். இங்கு வருபவனும் துன்பமில்லாமல் இருக்க வேண்டும்" என்று தோன்றிடப் பேசியமையால் நீ தீயவழியினின்றும் விலகியவன் என நன்கு புரிகிறது. நீ யார்? என்று கேட்டான். அதற்குப் பதிலாக,

*மஞ்செனத்திரண்டகோல மேனிய மகளிர்க்கெல்லாம்*
*நஞ்செனத் தகையவாகி நளிர் இரும்பனிக்குத் தேம்பாக்*
*கஞ்சம் ஒத்தலர்ந்த செய்ய கண்ணாயான் காற்றின் வேந்தர்க்*
*கஞ்சனை வயிற்றின் வந்தேன் நாமும் அனுமன் என்றான்*

நீ யார்? என்பதற்கு "காற்றின் வேந்தற்கஞ்சனை வயிற்றின் வந்தேன் நாமமும் அனுமன்" என்பதே பதிலாக அமைய எஞ்சிய இரண்டே முக்கால் அடிகள் இராமன் திருமேனி அழகையும், திருக்கண்கள் அழகையும் வர்ணிப்பவைகளாய் அமைத்துள்ளானே கம்பன். அது ஏன்?

"நீ யார்?" என்ற ராமன் கேள்வியின் பின்னணியாக அனுமன் இவைகளையெல்லாம் தானே எழுப்பிக் கொள்கிறான். "நாம் யாராய் இருந்தால் என்ன? நாம் அவன் வாழ்வில் நன்மை செய்யப்போகிறவனா?" என்று எண்ணிமிட்ட கேள்வியாய் இருந்துவிட்டால் "நம்மை வெவ்வழி நீங்கியோய்" என்று வேறு விளித்திருக்கிறான். இவைகளுக்குப் பொருந்துமாறு பதிலளிக்க வேண்டும் என்று முடிவு செய்கிறான். அதன் அடிப்படையில் பதில் கூறுகிறான்.

"என்னை யார் என்றா கேட்கிறீர்கள். நான் உங்கள் பக்தன் உங்கள் உருவை என் நெஞ்சகம்பால் மாறாமல் எழுதிக்கொண்டவன். அவ்வுருவை விட்டு அகலாத மனம் உடையவன். உங்களை காணப் புறப்பட்டு வந்தபோது சுக்ரீவன் அமைச்சனாக வந்த நான், உங்கள்

நீலமேக வண்ண மேனியையும், வாடாத செந்தாமரை மலரொத்த கண்களையும் கண்ட பின்னர் என்னை அதில் இழந்தேன். உம்மிடம் பக்தி பூண்டேன். உம்மைத் தெய்வம் என உணர்ந்தேன். உமக்கு அடிமை பூண முடிவு செய்தேன். உம்மை எம்முள் இட்டுவிட்ட காரணத்தால், நெஞ்சிலுறை உம்மைப் பிரிய மனம் இல்லாதவனாய், உம் திவ்ய மங்கள உருவை மறக்காத நிலையில் மீண்டும் நினைவு பூண்டு இவ்வுலக உணர்வு பெற்றேன்'' என்றெல்லாம் தன் உள்ளத்தை வெளிப்படுத்திப் பின்னர் ''காற்றின் வேந்தர்க்கு அஞ்சனை வயிற்றின் வந்தேன்'' என்று சொல்லி மேலும் விரிப்பானாயினன்.

*இம்மலை இருந்து வாழும் எரிகதிர் பரிதிச்செல்வன்*
*செம்மலுக்கு ஏவல் செய்வேன் தேவ நும் வரவு நோக்கி*
*விம்மலுற்று அனையன்ஏவ வினவிய வந்தேன் என்றான்*
*எம்மலைக் குலமும் தாழ இசை சுமந்து எழுந்த தோளான்*

புகழுக்கொருவனான அனுமன் ''தேவா உங்கள் வரவினால் விம்மலுற்றவனும், இம்மலையிருந்ததனால் (அதாவது சாபத்தால் வாலிவரமுடியாத இடம் என்று) உயிர் வாழும் பேறுபெற்றவனும், சூரியன் அம்சமாய் வந்தவனும், செம்மலுமான சுக்ரீவனிடம் பணி செய்பவன். தாங்கள் யார் என்று அறிந்து போக வந்தேன்'' என்று கூறினான். தன் எண்ணம், தன் பெயர், தன் வரவின் காரணம் அனைத்தையும் ஒருங்கிணைத்துப் பேசிய அனுமன் சொல்லாற்றலை வியந்த ராமன், ஆற்றல், நிறைவு, கல்வி, அமைதி, அறிவு இவைகளில் இவனுக்கு வேற்றுமையில்லை. அனையனைத்தும் ஒருங்கே அமைந்த ஓர் அற்புதச் செல்வன் என்று உணர்ந்து தன் தம்பியைப் பார்த்து

*இல்லாத உலகத்தெங்கும் ஈங்கிவன் இசைகள் கூரக்*
*கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னுங் காட்சி*
*சொல்லாலே தோன்றிற்றன்றே யார்கொல் இச்சொல்லின் செல்வன்*
*வில்லார் தோள் இளையவீரா! விரிஞ்சனோ விடைவல்லானோ*

''தம்பி இலக்ஷ்மணா இவ்வுலகம் மட்டுமல்ல இப்போது நடைமுறையில் இல்லாத ஆனால் மிகப்பரந்த அண்டத்தில் எங்கோ

இருக்கின்ற உலகத்திலேயும் இவன் பெருமை கூறவேண்டுமாயின் ஒன்றுதான் சொல்லலாம். அதாவது இவன் கல்லாத கலை எதுவுமே இல்லை. இவன் வேதக்கடல். அது இவன் தோற்றம், இவன் சொல் இவைகளினால் தெளிவாகிறது. இச்சொல்லின் செல்வன், பிரம்மாவா, சிவபெருமானா யாரென்று தெரியவில்லை. இவன் சாதாரண பிரம்மசாரியல்ல. இவன் வடிவம் இவ்வுலகிற்கு அடிப்படையானது. இவன் நமக்கு ஆற்றப்போகும் தொண்டினை நான் நன்கு புரிந்துகொண்டேன். அதை நீ பின்னர் காண்பாய். வேதங்களை நன்கு உணர்ந்த முனிவர்கள் தேவர்கள். ஏன் தேவர்களின் தலைவர்கள் கூட இவன் மாதிரி பேசும் ஆற்றல் பெறுதல் அரிது'' என்றெல்லாம் கூறினான். பின்னர் அனுமனை நோக்கி "நீ சொன்ன உங்கள் அரசன் இடம் காட்டு'' என்றான். உடனே அனுமன் வீரர்களாகிய நீவிர் அவனைக் காண அணுகினீர் என்றால், எங்கள் தலைவனுக்கு எல்லாச் செல்வமும் மேலான வாழ்வும் அமைய வந்தீர் அன்றோ! நன்று நான் போய் எம்மன்னரை அழைத்து வருகிறேன். எம்மன்னரிடம் உம்மைப் பற்றிச் சொல்ல வேண்டுமே! என்னவென்று சொல்வது'' எனக்கேட்கும் பாடல்

*யார் என விளம்புகேன் நான் எங்குலத் தலைவற்கும்மை*
*வீரர்நீர் பணித்திர் என்றான் மெய்ம்மையின் வேலி போல்வான்*
*வார்கழல் இளைய வீரன் மரபுளிவாய்மை யாதும்*
*சோர்விலன் நிலைமையெல்லாம் தெரிவுறச் சொல்லலுற்றான்*

"சுக்ரீவனிடம் நான் உம்மை யார் எனச் சொல்வன்? வீரர் நீங்கள் கட்டளையிடுங்கள்'' என்று கேட்ட அனுமனைக் கம்பன் "மெய்ம்மையின் வேலிபோல்வான்'' என்று கூறுவான். "உங்களைப் பார்த்தவுடன் நீங்கள் தெய்வம் என்று உணர்ந்து கொண்டேன். நீங்கள் உங்கள் தெய்வத் தன்மையைக் காட்டிக்கொள்ள விரும்பாமல் சாதாரண மனிதன், எதையோ தேடிவருவதைப் போல் வரும் நிலைமையையும் கண்டேன். உங்களது தொண்டன் என்று எனக்கு நானே முடிவு செய்துவிட்ட பிறகு உங்கள் சங்கற்பத்திற்கு மாறாக

நடந்து கொள்ளமாட்டேன். எனவே, என் தலைவனிடம் தெய்வம் வந்திருக்கிறது என்று சொல்ல விரும்பவில்லை. நீங்கள் யாரென சொல்லட்டும். நீங்களே கட்டளையிடுங்கள்" என்று வினவிய பாங்கு, எப்படி ராமன் தெய்வமாக இருந்தும் தன்னைத் தெய்வம் என்று காட்டிக் கொள்ளவில்லையோ, அப்படி அனுமன் தெய்வம் தான் ராமன் என்று உணர்ந்தும் சுக்ரீவனிடம் அப்படிச் சொல்ல விரும்பவில்லை. எனவே ராமனின் மெய்ம்மைக்கு வேலியாய் நின்றவன் அனுமன் என்று கம்பன் கூறியுள்ள பாங்கு அனுமனை எவ்வளவு பெரிய பக்தன் என்று புரிந்துகொள்ளத் துணை செய்கிறது. இது கம்பனின் சூத்திரம்.

அனுமனுக்கு விடையளிக்கும் நிலையில் இலக்ஷ்மணன் இராமன் நிலைகளையெல்லாம் எடுத்துச் சொன்னான். அவற்றையெல்லாம் அறிந்து கொண்ட அனுமன் சுக்ரீவனிடம் போய், இராமனைப் பற்றி

*மேலவன் திருமகற்கு உரை செய்தான் விரைசெய்தார்*
*வாலி என்றளவலா வலியினான் உயிர் தெறக்*
*காலன் வந்தனன் இடர்க்கடல் கடந்தனம் எனா*
*ஆலம் உண்டவனின் நின்று அருநடம் புரிகுவான்*

"சூரியன் மகனே! வாலி எனும் அளவிலா வலிமையுடையவனை அழிப்பதற்காக யமன் வந்திருக்கிறான். நாம் துன்பக்கடலைக் கடந்து விட்டோம் என்றே நம்பலாம்" என்று சொல்லியதோடு நிற்காமல் மற்றவர்க்கு இடர்தரும் விஷத்தைத் தான் ஏற்று அவர்களை வாழவைத்த பரமேச்வரன் நிலையில் நின்று நடம்புரிந்தான் என்று கம்பன் முடிக்கிறான். இப்பாடலில் தான் தெய்வமென்று உணர்ந்ததையாவது சொல்லியிருக்க வேண்டும் அல்லது இளையபெருமாள் இலக்ஷ்மணன் கூறிய செய்திப்படி தசரதன் மகன் ராமன் என்றாவது சொல்லியிருக்க வேண்டும். இரண்டையும் விடுத்து "வாலியெனும் அளவிலா வலியினான் உயிர்தெறக் காலன் வந்தனன் என்று கூறுவானேன். இராமனிடம் வாலியைப்பற்றி இவன் சொன்னானா? ராமன் வாலியைக் கொல்கிறேன் என்று சொன்னானா?

இல்லையே. பின்னர் ஏன் இவ்வாறு அனுமன் கூறினான்.

சுக்ரீவன் இராமனும் இலக்ஷ்மணனும் வருவதைப் பார்த்து அஞ்சியவனாய் அல்லவா அனுமனை அனுப்பினான். அந்த சுக்ரீவன் அச்சத்தைப் போக்கும் நிலையில் அல்லவா பதில் அமைய வேண்டும். சுக்ரீவன் அச்சம் "வாலி மடிவான், அவனைக் கொல்ல வந்தவர்கள் இவர்கள் என்று சொன்னால் அல்லது நீங்காதே;" என்றெல்லாம் சிந்தித்து, சுக்ரீவன் அச்சத்தைப் போக்கும் நிலையில் "வாலி என்றளவிலா வலியினான் உயிர்தெறக் காலன் வந்தனன்" என்ற வரி எவ்வளவு அற்புதமான சொல்லாற்றல். இதுவல்லவா கம்பனின் சொல்லின் செல்வன் பேச்சு. கற்பவர் வியக்காமல் இருக்க முடியுமா?

இந்த அனுமனின் சொல்லாற்றல் சுந்தர காண்டத்தில் எப்படியெல்லாம் தோற்றுகிறது என இனிக்காண்போம். வாலியை விண்ணுலகேற்றி, சுக்ரீவனுக்கு நாட்டரசு நல்கி கார்காலம் முடியும் வரை கிஷ்கிந்தையில் பம்பையின் கரையில் தங்கிப் பின் சீதையைத் தேடும் நிலையில் சுக்ரீவனை நாடினான். இராமன் தனக்கு அரசு நல்கிய இராமனுக்கு நன்றியைக் காட்ட சுக்ரீவன் தன்னுடைய படையை நான்கு திசைகளிலும் சீதையைத் தேடிவரும்படி ஏவினான். தென்திசைக்கு அங்கதன் தலைமையில் ஒரு படை சென்றது. அப்படையில் அனுமனும் இடம் பெற்றிருந்தான். அவர்கள் தென்திசையில் தேடியவர்களாய் முடிவில் மஹேந்திர மலையிருந்த பக்கம் வந்தனர்.

அங்கிருந்த கழுகரசன் சம்பாதியால் இராவணன் சீதையை அபகரித்து இலங்கை நோக்கிச் சென்றதைக் கேள்விப்பட்டனர். இலங்கைக்கு யார் செல்வது என்று சிந்தித்தனர். அப்போது ஜாம்பவான் அனுமனை

*மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகை நாளீர்*
*நூலை நயந்து நுண்ணி துணர்ந்தீர் நுவல் தக்கீர்*
*காலனும் அஞ்சும் காய்சின மொய்ம்பீர் கடன் நின்றீர்*
*ஆலம் நுகர்ந் தானாமென வெம்போர் அடர்கிற்பீர்*

*வெப்புறு செந்தீ நீர்வளி யாலும் விளியாதீர்*
*செப்புறு தெய்வப் பல்படை யாலும் சிதையாதீர்*
*ஒப்புறின் ஒப்பார் நும்மல தில்லீர் ஒருக்காலே*
*குப்புறின் அண்டத் தப்புற மேயும் குதிகொள்வீர்*

*நல்லவும் அன்றோர் தீயவும் நாடி நவைதீரச்*
*சொல்லவும் வல்லீர் காரியம் நீரே துணிகிற்பீர்*
*வெல்லவும் வல்லீர் மீளவும் வல்லீர் மிடலுண்டேல்*
*கொல்லவும் வல்லீர் தோள்வலி என்றும் குறையாதீர்*

*நீதியின் நின்றீர் வாய்மை அமைந்தீர் நினைவாலும்*
*மாதர்நலம் பேணாது வளர்ந்தீர் மறையெல்லாம்*
*ஓதிஉணர்ந்தீர் ஊழிகடந்தீர் உலகீனும்*
*ஆதி அயன்தானே என யாரும் அறைகின்றீர்*

*ஏகுமின் ஏகி எம்முயிர் நல்கி இசை கொள்ளீர்*
*ஓகை கொணர்ந்தெம் மன்னையும் இன்னற் குறையில்லாச்*
*சாகரம் முற்றும் தாவிடும் நீர் இக்கடல் தாவும்*
*வேகம் அமைந்தீர் என்று விரிஞ்சன் மகன் விட்டான்*

“உலகைப் படைத்த பிரமன் ஆயுள் முடிந்தாலும், உமது ஆயுள் முடியாமல் வாழ்கின்ற சிரஞ்சீவி தாங்கள். எல்லா நூல்களையும் கற்க வேண்டும் என்ற விருப்போடு கற்று, அவற்றின் சூழ்பொருள் உணர்ந்து அவற்றைச் சொல்லவும் வல்லீர். யமனே அஞ்சுகின்ற கோபம் கொள்கின்ற தாங்கள் இராமகாரியத்தைச் செய்ய நின்றீர். விஷத்தை உண்டு அமரர்தம் துயரம் போக்கிய பரமசிவன் போல எங்கள் துயரம் போக்கக் கடும் போர் செய்யக் கூடிய ஆற்றல் பெற்றவர் தாங்கள்.”

“பஞ்சபூதங்களான வெம்மைதரும் தீ, நீர், காற்று இவைகளால் அழிக்க முடியாதவர் தாங்கள். உலகில் பேராற்றல் கொண்டதாகச் சொல்லப்படும் தெய்வப் படைகளாலும் சிதைக்க முடியாதவர் தாங்கள். உமக்கு நிகராகக் கூறின் உம்மையல்லாது வேறுயாரையும் ஒப்பிட முடியாதவர்.”

“உரையாடும் போதே நல்லது எது, தீயது எது என்று நாடி தீமையல்லாத நல்லவைகளை மட்டும் சொல்லவல்லீர். எனவே இராமன் காரியமாம் சீதையைத் தேடிக் கண்டு வரல் என்பதற்குத் துணிவீராக. உம்மால் எதிரிகளை வெல்ல முடிவதுடன் அவர்தம் வஞ்சனையிலிருந்தும் மீளவல்வீர், ஒருவேளை போர் என்று வந்தால் வெல்லவும் வல்லீர். நீதியில் நிற்பவர் நீர், வாய்மையில் வல்லவர் நீர், பெண்ணலம் மனதிலும் பேணாத பிரம்மசாரி நீர், வேதங்களையெல்லாம் நன்கு கற்று உணர்ந்தவர் நீர். பிரளயத்தையும் கடந்தவரானீர், பிரம்மாவே என்று எல்லோராலும் சொல்லப்படுகின்றவர் நீர்.”

எனவே, நீர் செல்லும், சென்று எம்முயிர் காத்துப் புகழ் கொள்வீர். மகிழ்ச்சியான செய்தியாம் “சீதையைக் கண்டேன்” என்ற செய்தியைச் சொல்லி, எம் தலைவராம் ராகவன் குறையையும் தீர்த்துவைப்பீர். ஏழு ஸாகரங்களையே தாவிடும் ஆற்றல் உள்ள தாங்கள் கேவலம் இக்கடலைக் கடக்கும் வேகம் உடையீர் என்று முடிவு செய்தல்லவா உம்மை அனுப்புகிறோம்” என்று ஜாம்பவான் சொன்னார்.

ஜாம்பவான் சொன்னதைக் கேட்டு ஹனுமன் இலங்கை செல்லத் துணிகிறான். இராமனுக்காகவும், வானரங்களுக்காகவும் இலங்கை செல்வதாக முடிவு செய்கிறான். பின்னர் வானரர்களைப் பார்த்து, “நூறு யோசனை உள்ள இக்கடலை முன்பு உலகளந்த ஈசனைப் போல் தாவி, இலங்கை நகர் மேவி, அவ்விலங்கையின் அரக்கர்களை வென்று, வாசவன் முதலினோர் வந்தாலும் அவர்களையும் வென்று வருவேன் சீதையைக் கண்டு வருவேன்” என்று கூறிச்சென்றான்.

இராமன் அருளும், வானரங்களின் நலமும் துணையாய் நிற்க இலங்கை நோக்கிக் கிளம்பிய அனுமனை, கடலரசனால் ஏவப்பட்ட மைந்நாகபர்வதம் தன்னகத்தே ஓய்வு எடுத்துச் செல்ல வேண்டியது அனுமன்

*வருந்தேன் அது என்துணை வானவன் வைத்த காதல்*
*அருந்தேன் இனி யாதும் என்ஆசை நிரப்பின் அல்லால்*

*பெருந்தேன் பிழிசாரல் நின்அன்பு பிணித்த போதே*
*இருந்தேன் நுகர்ந்தேன் இதன்மேல் இனி ஈவதுண்டோ?*

"எனக்கு உடல் வருத்தமா! ஒரு போதும் இல்லை. அதற்குக் காரணம் என் தலைவனின் துணைவனாம் ராமன் என்மேல் வைத்த அன்பு. அவன் ஆசையாம் "சீதையைத் தேடிக்காணல்" என்பதை பூர்த்தி செய்தால் அல்லது எதையும் சாப்பிடமாட்டேன். உம்மீது பட்டு வந்த காற்று என்மீது பட்டதே. அப்போதே உம்மால் உபசரிக்கப்பட்டவன் ஆனேன். அதைவிட வேறு என்ன வேண்டும்" என்று மைந்நாக பர்வதத்திற்கு விடையளித்துத் தன் பயணத்தைத் தொடர்ந்தான் அனுமன்.

வழியில் தேவர்களால் வேண்டப்பட்டவளாய் அனுமனுக்குத் தடையாய் வந்த ஸுரஸையின் வாயில் புகுந்து வெளிவந்து பின்னர் அவள்தன் அருள் சுமந்து, அங்காரதாரகையாம் அரக்கியைக் கொன்று பின் அனுமன் இலங்கை சார்ந்து பவளமலையில் தங்கினான். ஆதவன் மறையும் வரை பொறுத்திருந்து, மறைந்ததும் சீதையைத் தேடும் முயற்சியில் இலங்கையின் மதிலையடைந்தான். இலங்கையின் காவல் தெய்வமாம் இலங்கை மாதேவியை அடித்து வீழ்த்தினான். இலங்கை ஊர் புகுந்து தேடலுற்றான். கும்பகர்ணன் மாளிகையை அடைந்த அனுமன் கும்பகர்ணனையே இராவணன் என்று எண்ணி ஆத்திரமும் கோபமும் கொண்டான். "இவனுக்குப் பத்துத் தலைகளும் இருபது கரங்களும் இல்லையே" என்று சிந்தித்து கோபத்தை அறிவினால் அழித்தான். அவ்விடம் அகன்று இந்திரஜித் மாளிகையை அடைந்து அவனை உற்று நோக்கியவனாய்.

*வளையும் வாள் எயிற்று அரக்கனோ, கணிச்சியான் மகனோ*
*அளையும் வாழ் அரியனையவன் யாவனோ அறியேன்*
*இளையவீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்*
*உளையும் வெஞ்சமம் இவனொடும் உளதென உணர்ந்தான்.*

"யார் இவன்? அரக்கன் மகனோ அல்லது சிவபெருமான் மகனான முருகனா! இவன் யாராய் இருந்தாலும் இவனோடு இராமரும்,

இலக்ஷ்மணரும் பலநாள்கள் போரிட வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது என்று முடிவு செய்தான். இதிலிருந்து அனுமனுக்கு சாமுந்திரிகா லட்சணம் தெரியும் என்பதைக் கம்பன் சொல்லாமல் சொல்லி விளக்கி இருப்பது அறியலாம்.

மீண்டும் அங்கிருந்து புறப்பட்டு மயன்மகளும் இராவணன் தேவியுமான மந்தோதரியைக் கண்டு சீதை என்றே முதலில் எண்ணமுற்று அதனால் வேதனையுற்று, மீண்டும் தேறி "இலக்கணங்களும் சில உள்ளனவே தவிர இவள் சீதை இல்லை" என்று முடிவு செய்து பின் தேடும் பணியில் ஈடுபட்டான். அனுமன் இராவணன் உறங்கிக் கொண்டிருந்த மாளிகையை அடைந்து இராவணனைக் கண்டான். ஆத்திரம் கொண்டான்.

*தோள் ஆற்றல் என்னாகும் மேல்நிற்கும் சொல் என்னாம்*
*வாள் ஆற்றுக் கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடி என்*
*தாள் ஆற்றலால் இடித்துத் தலைபத்தும் தகர்த்தென்றன்*
*ஆள் ஆற்றல் காட்டேனேல் அடியேனாய் முடியேனே*

"இவன் தோள் ஆற்றல் என்னாகும். இவன் பெற்ற வரம்தான் என்னாகும்? கூர்மையான அழகிய கண்களை உடைய சீதையை வஞ்சித்தானே இவன் மணிமுடி சூடும் தலைகளை என்தாள்களால் அடித்துப் பத்துத் தலைகளையும் தகர்த்து என் ஆற்றலை காட்டினால் அல்லது இராமனின் இலட்சியத் தொண்டன் ஆகேன்" என்று சீற்றம் கொண்டான். ஆனால் அவன் அறிவாற்றல் துணைநிற்க "எனது கோபம் என்னுள்ளேயே அடங்கட்டும். சீதையைச் சிறை வைத்த இராவணனை, இராமன் தூதனாய்ச் சென்ற ஓர் குரங்கு கொன்றது என்று சொன்னால் அது வில்லியாம் இராமன் வில்லுக்கு மாசு அல்லவா? எனவே கூடாது" என்று கோபத்தை அடக்கிக் கொண்டான். பின்னர் இல்லங்கள், தோட்டங்கள், பூங்காக்கள் என்று இலங்கையில் உள்ள எல்லா இடங்களிலும் தேடினான். தேவலோகப் பெண்களையும், நாகலோகப் பெண்களையும் கண்டானே தவிர சீதையைக் கண்டான் இல்லை. அதனால் வருத்தமடைந்தவனாய் அனுமன்

*கொன்றானோ கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலால்*
*தின்றானோ அப்புறத்தே சேர்த்தானோ சிறை அறியேன்*
*ஒன்றானும் உணரகிலேன் மீண்டினிப்போய் என் உரைக்கேன்*
*பொன்றாத பொழுதெனக்குக் கொடுந்துயரம் போகாதால்*

*கண்ணிய நாள் கழிந்துளவால் கண்டிலனால் கனங்குழையை*
*விண்ணடைதும் என்றாரை ஆண்டிருத்தி விரைந்தயான்*
*எண்ணியது முடிக்கில்லேன் யான் முடியாதிருப்பே னோ*
*புண்ணியம் என்றொரு பொருள் என்னுழை நின்றும் போயதால்*

"இராவணன் கற்பழியாக் குலமகளாம் சீதையைக் கொன்று விட்டானா? கொடுந்தோழிலையுடைய இராவணன் தின்று விட்டானோ? வேறு எங்காவது சிறை வைத்து விட்டானோ? ஒன்றும் உணர முடியவில்லையே. எப்படி மீண்டும் இராமனிடம் போவேன்? இராமனிடம் என்ன சொல்லுவேன். இப்பொழுது நான் கொண்டுள்ள கொடுந்துயரம் என் உயிரை நீத்தால் அல்லது போகாது" என்றான் வேதனையுடன்.

"குறிப்பிட்ட நாள்கள் கழிந்துவிட்டதால் சீதையைக் காணாமல் போனால் உயிரைவிட்டு விண்ணையடைவோம் என்று சொன்னவர்களை இருங்கள்" என்று சொல்லி விரைந்து வந்த நான் எண்ணியது முடிக்கவில்லை. என் வானரத்தோழர்கள் எண்ணியது முடிக்கவில்லை. இராமன் எண்ணியதை முடிக்கவில்லை. இவற்றையெல்லாம் முடிக்காமல் இருக்கும் நான் என்னை முடித்துக் கொள்வன். ஏனென்றால் அனைவரையும் காப்பாற்றும் புண்ணியம் என்னை விட்டுப் போனதன்றோ," என்று பலவாறு புலம்பினான்.

இவ்வாறு எண்ணமிட்டவனாய் இங்கும் அங்கும் திரிந்த அனுமன் கண்களில் அயல் நின்ற ஓர் மலர்ச் சோலை தென்பட்டது. "அம்மலர்ச் சோலையில் தேடி சீதையைக் கண்டால் என் சிறுமை தீரும்" என்று எண்ணி அச்சோலையை அடைந்தான். அங்கே அரக்கியர்கள் இடையே, அவர்கள் காவலில் இருந்த ஒரு பெண்ணைக் காண்கிறான். அவள் சீதையே என்று முடிவு செய்தவனாய்

*வீடினதன்று அறம்யானும் வீகிலேன்;*
*தேடினேன் கண்டனன் தேவியேனெ*
*ஆடினான், பாடினான், உவகையாம்*
*தேனை உண்டவனாய்க் களித்தான்*

சீதையைக் கண்ட மன மகிழ்ச்சியிலே ஆடிப்பாடிக் களித்த அனுமன், ஆட்டத்தை நிறுத்தியவனாய் மீண்டும் சீதையைப் பார்த்து "இவள் உருவின் இலக்கணங்கள் ஐயன் கூறியவாறே உள்ளன. இவள் பாற்கடல் வல்லியே போல் உள்ளாள். அவனோ அரவின் நீங்கிய தேவன். எனவே இவள் சீதையே என்று முடிவு செய்கிறான். "இராமனையும் இலக்ஷ்மணனையும் பார்த்த போது தேவர்களின் முதல் மூவரோ என்ற எண்ணம் கொண்ட அனுமன் இப்போது சீதை இலக்குமியே என்று முடிவு செய்து இராமன் திருமாலே என்று முடிவு செய்கிறான்" என்ற கம்பன் வரிகள் இராமன் திருமாலின் அவதாரமே என்று முடிவு கொண்டதன் விளைவு.

மாசுண்ட மணியென, தேய்வுண்ட திங்களெனத் தேய்ந்தவளாய்த் தோற்றிய தேவியைக் கண்ட அனுமன் அப்பிராட்டியின் பெருமையை எண்ணி எண்ணி வியக்கிறான். "எதைச் சொல்வது இவளைத் தழுவும் பாக்கியம் பெற்ற ராகவன் புயத்தையா! பெண் குலத்தின் திலகமாம் இவள் மனத்தின் உறுதியையா, இவளை மகளாய்ப் பெற்ற ஜனகன் குலத்தையா! ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது தேவர்கள் தவறிழைக்கவில்லை, தெய்வ வேதியரும் தவறிழைக்கவில்லை. அறமும் இன்னும் அழிந்துபடவில்லை. என் அடிமைத் தொழிலும் வீணாகவில்லை" என்றெல்லாம் எண்ணினான். பிராட்டியின் கற்பின் பெருமையைப் பெரிதும் வியந்து பாடிய கம்பனின் வரிகள்

*தருமமே காத்ததோ சனகன் நல்வினைக்*
*கருமமே காத்ததோ கற்பின் காவலோ*
*அருமையே அருமையே! யாரிது ஆற்றுவார்?*
*ஒருமையே எம்மனோர்க் குரைக்கற் பாலதோ*

“தருமம் காத்ததோ” என்று சிந்திக்கிறான். “ஒருவேளை சனகன் நல்வினை காத்ததோ” என்று எண்ணுகிறான். “இல்லை இல்லை இவளது கற்பு தந்த மன உறுதியல்லவா இவளை காத்தது” இப்படி மிகப்பெரிய படைபலம், பணபலம், தெய்வபலம் எல்லாம் அமையப்பெற்ற இராவணன் இலங்கையில் ஒரு தொல்லையுமின்றி இப்பெண் தனியே இருந்திருக்கிறாள் என்றால் அது கற்பு ஒன்றினால்தான். வள்ளுவரின் கூற்றாம் “சிறைகாக்கும் காப்பு எவன் செயும் பெண்கள் நிறை காக்கும் காப்பே தலை” என்றதற்கு இலக்கணம் கூற வேண்டுமானால் “சீதை தான்” மற்று ஒருவராலும் இத்தகைய உறுதியோடு இருந்திருக்க முடியாது என அறுதியிட்டு “அருமையே அருமையே யாரிது ஆற்றுவார் ஒருமையே” என்று தலைகட்டுகிறான் கம்பன்.

இப்படி தவநிலையில் ராமனையே எண்ணிய நிலையில் இருந்த சீதை இருந்த இடம் நோக்கி ராவணன் வருகிறான். இராவணன் வரும் நிலை கண்டு அஞ்சுகிறாள் சீதை. அது கண்ட அனுமன்

*வாழி சானகி வாழி இராகவன்*
*வாழி நான்மறை வாழியர் அந்தணர்*
*வாழி நல்லறம் என்றுற வாழ்த்தினான்*
*ஊழி தோறும் உயர்வுறும் கீர்த்தியான்*

ஊழிகள் தோறும் வாழ்பவர் நெஞ்சில் உயர்வைப் பெறப்போகும் சிரஞ்சீவியான அனுமான் “ஜானகி வாழட்டும்” என்றான். ஏன் தெரியுமா? நல்லறம் வாழ வேண்டுமானால் ஜானகியைப் போன்ற கற்பின் கனலி அச்சமில்லாமல் வாழ வேண்டும். அடுத்து “வாழி ராகவன்” என்றான். நல்லறம் வாழ சீதை வாழ வேண்டுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் சீதை வாழ இராமன் வாழ்வது. அடுத்து “நான்மறை வாழி” வேதங்கள் வாழ்ந்தால் தான் வேதநாயகனாம் ராகவன் வாழ முடியும். ராகவன் வாழ்ந்தால் சீதை வாழ்வாள். சீதை வாழ்ந்தால் நல்லறம் வாழும். அடுத்து “வாழியர் அந்தணர்” வேதம் வாழ வேண்டும் வேதம் ஓதி அதன் பயனாய்

எல்லா உயிரினங்களும் வாழ வேண்டும் என்று சிந்தித்து அனைத்து உயிர்களிடம் இறைவன் உறைகிறான் என்று உணர்ந்து "எல்லாவுயிர்க்கும் செந்தண்மை பூண்டு வாழும் அந்தணர் வாழ வேண்டும். அந்தணர் வாழ்ந்தால் வேதம் வாழும். வேதம் வாழ்ந்தால் ராகவன் வாழ்வான். ராகவன் வாழ்ந்தால் சீதை வாழ்வாள். சீதை வாழ்ந்தாள் நல்லறம் வாழும்" என்ற உயர்கருத்து தோன்ற வாழ்த்தினான்.

இங்கே நமக்கோர் ஐயம் எழலாம். சீதையோ கற்பின் கனலி. அவள் ராவணன் வருகையைக் கண்டு ஏன் அஞ்சவேண்டும். கம்பன் சிந்தனை "இராவணனால் தனக்கோ, தன் கற்பிற்கோ ஒரு கேடும் வராது என்று உணர்ந்தும் அஞ்சினாள் சீதை என்றால் அது இரண்டிற்காக. ஒன்று இராமனையே தெய்வமாகக் கொண்டு அவனையே உள்ளத்தில் நினைந்து நினைந்து தவங்கிடக்கும் தன் தவநிலை தடைபெறுகிறதே என்ற அச்சம், மற்றொன்று புன்மதியாளனாம் இராவணனின் புகழ்ச் சொற்களையும் அவனின் ஆசை வார்த்தைகளையும் காதால் கேட்கப் போகிறோமே என்ற அச்சம்.

இராவணன் தன் செல்வச் செருக்கையும் தன் பெருமையையும், விண்ணவரை ஏவல்கொண்ட ஆண்மையையும் திக்விசயம் செய்து கயிலையைப் பெயர்த்த பெருமையையும் பரக்கக் காட்டுபவனாய் சீதை இருக்கும் இடம் வந்தான். நயமுடன் பேசினான். பயம் தரு சொற்களால் மருட்டினான். தன் நாட்டின் செல்வங்களை அவளுக்கே அர்ப்பணிப்பதாக ஆசை காட்டினான். ஆனால் மனத்திண்மையும், கற்பின் சீலமும், மிக்க சீதை ராமன் பெருமைகளை எண்ணி, இராவணனைப் புல்லினும் நொய்யதாகக் கருதி ஒரு துரும்பினைக் கிள்ளிப்போட்டு துரும்பெனக்கனன்று சொன்னாள்.

*மேருவை உருவல் வேண்டின் விண் பிளந்து ஏகல் வேண்டின்*
*ஈரெழு புவனம் யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின்*
*ஆரியன் பகழி வல்லது அறிந்திருந்து அறிவிலாதாய்*
*சீரிய அல்ல சொல்லித் தலை பத்தும் சிந்துவாயோ*

*பெற்றுடை வரனும் நாளும் பிறந்துடை உரனும் பின்னும்*
*மற்றுடை எவையும் தந்த மலரயன் முதலோர் வார்த்தை*
*வில்தொடை ராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்*
*இற்றுடைந் திறுதல் மெய்யே விளக்கின் முன்இருள் உண்டாமோ!*

அறிவில்லாதவனே, அன்று என்னைச் சிறையெடுத்த போது சொன்ன வார்த்தைகள் உனக்கு நினைவிருக்கிறதா? "மேருவைப் பறிக்க வேண்டுமா? விண்ணை இடிக்க வேண்டுமா? நீரைக் கலக்க வேண்டுமா? நெருப்பை அவிக்க வேண்டுமா? உலகை எடுக்க வேண்டுமா? என்றெல்லாம் பேசினாயே. சொல்கிறேன் கேள் நீ மேரு, விண், நீர், நெருப்பு இவை இருக்கும் இடம் சென்று தான் அச்செயல்களைச் செய்ய இயலும். ஆனால் என் தலைவன் ராமனோ, தான் இருக்கும் இடத்திலிருந்தபடியே ஒரே ஒரு கணை ஏவினால் அது மேருவை உருவும், விண்ணைப் பிளந்து ஏகும், பதினான்கு உலகங்களையும் அழிக்கும். இதை உணர்ந்தவன் நீ, இருந்தும் உனக்கு பெருமை தராத, அறத்திற்கும் பெருமை தராத சொற்களைப் பேசிப் பத்துத் தலைகளையும் இழக்கப் போகிறாய்."

"நீ பெற்ற வரம், நீ பெற்ற வாழ்நாள் இவைகளினால் இப்படிச் செய்கின்ற நீ ஒன்று கேள். என் நாயகன் ராமன் வில்லின் நாண் எறிந்து கணையொன்றையும் தொடுக்குமாயின் உனது வரம், வாழ்நாள் அனைத்துமே இற்றுப் போகும். மீண்டும் உறுதி சொல்வன் உன்னை வெற்றி கொண்ட கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்ற ஜமதக்னியின் மகனாம் பரசுராமனின் தவம், என் ஐயனின் கணைக்கு இலக்கானது. ஒன்றை மறந்து விட்டாயே! என்னை மாயமானை ஏவி வஞ்சித்து, என் ஐயனையும், இளவளையும் பிரித்து, அவர்கள் இல்லாத சமயம் ஸன்யாசியாய் வேடமிட்டு ஏமாற்றிக் கவர்ந்து வந்த நீ இப்போது வீரம் பேசுகிறாய்" என்றெல்லாம் கூற இராவணனின் தன்மான உணர்வு பொங்கி எழ

*ஒன்றுகேள் உரைக்க நிற்கோர் உயிரென உரியோன்றன்னைக்*
*கொன்று கோள் இழைத்தால் நீ நின் உயிர் விடக்கூற்றங்கூடும்*

*என்றன் ஆருயிரும் நீங்கும் என்பதனை இயைப எண்ணி*
*அன்று நான் வஞ்சம் செய்தது ஆர் எனக்கு அமரில் நேர்வார்.*

"பெண்ணே! பேசத் தெரிந்தவளே! அன்று உன்னை வஞ்சனையாகக் கொண்டு வந்தது கேவலம். இராம இலக்ஷ்மணர்களோடு போரிட அஞ்சி என்றா நினைக்கிறாய்? இல்லை போரிட்டிருந்தால் உன் உயிரனைய ராமன் இறந்துபட்டிருப்பான். இராமன் இறந்துபடின் நீயும் இறந்துபடுவாய். நீ இறந்துபட்டால், நின் வடிவழகைக் கண்டு பெண்ணாகிய என் தங்கை சூர்ப்பனகையே மயங்கி உன்னழகையெல்லாம் வர்ணிக்க, அவள் தன் வார்த்தைகளைக் கேட்டே நின்னை என் மனமெனும் சிறையில் வைத்து நின்பால் நீங்காத காதல் கொண்ட என் உயிரும் பிரிந்து போயிருக்கும் இவை கருதியல்லவா அப்படிச் செய்தது. அதுமட்டுமல்ல என்னோடு போரிட இங்கு யார் உளர். இப்பொழுதே சென்று இராம இலக்குவர்களை அழித்து வருகிறேன்" என்று வாய் வீரம் பேசி காவல் அரக்கியரைப் பார்த்து "எவ்வகை யானும் இவளை இணங்கச் செய்மின் இல்லை உங்களுக்கு நான் நஞ்சாவேன்" என்று எச்சரித்துப்பின், "இன்னும் இரண்டு மாதங்கள் உனக்கு அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள் நீ இணங்கவில்லையெனில் என் ஆட்கள், (என் காலை உணவிற்காக) உன்னைக் கொன்றுவிடுவார்கள்" என்று சீதையையும் மிரட்டிவிட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றான்.

இராவணன் அப்பால் சென்றதும் அரக்கியர்கள் இராவணன் பெருமைகளையெல்லாம் எடுத்தியம்பி அவன்பால் சீதை மனம் திரும்ப முயற்சித்தனர். திரிசடையென்பாள் தான் கண்ட கனவினைச் சொல்லி தேற்றிய போதும் தேறாத உள்ளங் கொண்ட சீதை, தான் தன் உயிரினும் இனிய நாயகனைப் பிரிந்து, இலங்கையில் வாழ நேர்ந்ததையும், இராவணன் பெருமைகளைக் கேட்க நேர்ந்ததையும் எண்ணி எண்ணி வேதனைப்பட்டாள். முடிவில் தன் உயிரைப் போக்கிக் கொள்வது என்று முடிவு செய்தாள். தன் நீண்ட கூந்தலை அருகில் இருந்த மரக்கிளையில் சுற்றித் தன் கழுத்தில் சுருக்கிட்டுக் கொள்ள முடிவு செய்தவளாய்ச் செயலில் ஈடுபடுவதைக் கண்டு,

*கண்டனன் அனுமனும் கருத்தும் எண்ணினான்*
*கொண்டனன் துணுக்கம் மெய்த்தீண்டக் கூசுவான்*
*அண்டர் நாயகன் அருள்தூதன் யானெனத்*
*தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினான்*

"சீதையைக் காப்பாற்றக்கூடிய ஆற்றல் ராமநாமத்திற்குத் தான் உண்டு" என்று எண்ணியவனாய் "உலக நாயகனாம் ராமனுடைய தூதன் யான்" என்று சொல்லிய வண்ணம் சீதையை வணங்கி அவள் எதிர் தோன்றினான். இப்பாடலில் ஓர் அற்புதமான சொற்றொடர் "மெய் தீண்டக் கூசினான்" அவன் கூசியதற்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று இராவணனையே துரும்பெனக்கனன்று கூறிய சீதையின் தவம். மற்றொன்று பிரம்மசாரியான தான் பெண்ணைத் தொடுதல் முறையல்ல என்ற எண்ணம். அதாவது பெண்மையின் கற்பும், ஆண்மையின் பிரம்மசாரியமும் தான் ஆற்றரும் தவங்கள். அவைகள் எக்காரணம் கொண்டும் மீறக்கூடாதவை என்பதை உலகம் புரிந்துகொள்ள வேண்டும் என்ற கம்பனின் உள்ளப்பாங்கினை எடுத்துக்காட்டுவதாகும்.

தன் நாயகன் பெயரைச் சொல்லித் தன்னெதிரே நிற்கும் அனுமனைப் பார்த்து, அவன் முகத்தில் காணும் இரக்க பாவங்கண்டு அப்பா "நீ அரக்கனோ, அமரனோ, அல்லது குரங்கினத்தொருவனோ, கொடுமையாளனோ, இரக்கமுள்ளவனோ யாராவது ஆகுக. என் ஐயன் பெயரைச் சொல்லி என் உள்ளம் உருகச் செய்தாய் நீ யார்?" என்று வினவினாள், நீ யார் என்று கேட்ட சீதைக்கு அனுமன் பதிலாய்க் கூறிய கம்பனின் பாடல்கள்

*ஆயசொல் தலைமேல் கொண்ட அங்கையன் அன்னை நின்னை*
*தூயவன் பிரிந்த பின்பு தேடிய துணைவன் தொல்லைக்*
*காய்கதிர்ச் செல்வன் மைந்தன் கவிக்குலம் அவற்றுக் கெல்லாம்*
*நாயகன் சுக்ரீவன் என்றுளன் நவையின் தீர்ந்தான்.*

*மற்றவன் முன்னோன் அந்நாள் இராவணன் வலிதன் வாலில்*
*இற்றுகக் கட்டி எட்டுத் திசையினும் எழுந்து பாய்ந்த*

*வெற்றியன் தேவர் வேண்ட வேலையை விலங்கல் மத்தின்*
*சுற்றிய நாகம்தேய அமுதெழக் கடைந்த தோளான்*

*அன்னவன் தன்னை உம்கோன் அம்பொன்றால் ஆவி வாங்கிப்*
*பின்னவர்க் கரசை நல்கித் துணையெனப் பிடித்தான் எங்கள்*
*மன்னவன் தனக்கு நாயேன் மந்திரத்து உள்ளேன் வானின்*
*நன்னெடுங் காலின் மைந்தன் நாமும் அனுமன் என்பேன்*

சீதையின் வார்த்தையைக் கேட்ட அனுமன் தன் தலைக்கு மேல்கையைக் கூப்பியவனாய் "அம்மா தூயவனான ராமன் தங்களைப் பிரிந்த பிறகு தங்களைத் தேடியவனாய் வந்தான். சூரியன் மகனான சுக்ரீவனுடன் நட்பு கொண்டான். அந்த சுக்ரீவன் வாலியால் பல தொல்லைகள் அனுபவித்தவன். தன் தம்பியை அவன் மனைவியைப் பிரித்து தொல்லை கொடுத்தவன் வாலி. அவன் இராவணனை ஒரு சமயம் தன் வாலினால் இறுகக்கட்டி எட்டுத் திசையிலும் பாய்ந்த பேராற்றல் உடையவன். அது மட்டுமல்ல தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்து அமுதம் பெறாமல் களைத்துப் போய் வாலியை வேண்ட, அவன் தான் ஒருவனாகவே அமுதம் எடுத்துக் கொடுத்த ஓர் அற்புத ஆற்றலான். அத்தகு ஆற்றலானை நண்பனாம் சுக்ரீவன் பொருட்டு உன் நாயகன் ஒரே கணையால் ஆவியை வாங்கி, சுக்ரீவனுக்கு அரசை நல்கினான். அந்தச் சுக்ரீவன் துணையோடு உம்மைத் தேடுவான் துணிந்தான். அந்த சுக்ரீவனின் அமைச்சர்களில் ஒருவன் நான்.

அஞ்சனா தேவியாம், எம் தாய்க்கு வாயுவின் அம்சமாய்ப் பிறந்தவன் நான். என் பெயர் அனுமன்" என்றெல்லாம் பதில் அளித்தான். "நீ யாவன்?" என்ற கேள்விக்கு "அஞ்சனை வயிற்றின் வந்தேன் நாமும் அனுமன்" என்பது மட்டுமே பதிலாக அமைய எஞ்சிய சுக்ரீவன், வாலி இவர்கள் பற்றிய வரிகள் பின்னணியாக அமைவானேன். கம்பனின் சிந்தனை விரிகிறது. நாம் அளிக்கும் பதில் சீதையின் உள்ளத்தில், ராமன் ராவணனை அழித்து அவளை மீட்கப் போவது உறுதி என்ற நம்பிக்கையை அளிக்கும் நிலையில்

அமைய வேண்டும் என்று அனுமன் சிந்தித்ததின் விளைவுகள்தான் அவ்வரிகள்.

சீதையிடம் இராமன் சொல்லி யனுப்பிய அடையாளங்களையும், இராமனின் அழகு நலங்களையும், அறப்பண்புகளையும், சீதையின் பிரிவால் இராமன் தவித்ததையும் கூறி, இராமன் கொடுத்தனுப்பிய கணையாழியை நீட்டினான். அக்கணையாழியை எடுத்துக்கொண்ட சீதையின் நிலையை விவரிக்கும் கம்பனின் வரிகள்

*இறந்தனர் பிறந்த பயன் எய்தினர் கொல் என்கோ*
*மறந்தனர் அறிந்துணர்வு வந்தனர் கொல் என்கோ*
*துறந்த உயிர் வந்திடை தொடர்ந்தது கொல் என்கோ*
*திறஞ் தெரிவ தென்கோல் இவண் நன்னுதலி செய்கை*

*வாங்கினள் முலைக்குவையில் வைத்தனள் சிரத்தால்*
*தாங்கினள் மலர்க்கண்மிசை ஒத்தினள் தடந்தோள்*
*வீங்கினள் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போடு*
*ஏங்கினள் உயிர்த்தனள் இதுஎன்னதெனல் ஆமே.*

அண்ணலின் மோதிரம் வாங்கியவுடன் அன்னையவள் அடைந்த மகிழ்ச்சி சொல்லுந் தரம் அன்று. ஆயினும் கம்பன் சொற்சிலம்பம் கொண்டு ஆடுகின்ற நிலைகள் அப்பப்பா. ஒருவன் இறந்துபட்டான் என வைத்துக்கொள்வோம். திடீரென்று அவன் பிறந்து, பிறந்ததன் பயனாம் இறைவனைக் காணும் நிலையை பெற்றுவிட்டால் அந்த பேரின்பத்திற்கு இணையேது. அதேபோல் மகிழ்ந்தாளாம். வேதங்கள் நன்கு கற்ற ஒருவன் காலப்போக்கில் உலகின் மாயமயக்குகளில் ஆழ்ந்து வேதத்தை மறந்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். திடீரென்று ஒருநாள் அவன் நல்வினைப் பயனாய் மறந்த வேதம் நினைவிற்கு வந்து, நினைவிற்கு வந்தது மட்டுமின்றி, அதன் நுண்மாண் நுழைபுலன்களும் உணர்ந்து கொள்ளும் ஆற்றலும் அமையப் பெற்றுவிட்டால் அவன் எத்தனை மகிழ்ச்சியை அடைவானோ அத்தகைய மகிழ்ச்சியையடைந்தாளாம் சீதை. ஒருவன் உடலினின்று பிரிந்து சென்ற உயிர் மீண்டும் அந்த உடலில் புகுந்து, புகுந்தது

மட்டுமின்றி பழைய நினைவுகளோடு தன் வாழ்வையும் தொடரும் நிலையுண்டானால் அவன் எவ்வளவு மகிழ்ச்சியடைவானோ அத்தகைய மகிழ்ச்சியை பிராட்டி அடைந்தாளாம்.

அந்த மோதிரம் சீதைக்கு உயிர், உணர்வு வாழ்வு அனைத்தையும் ஒருங்கு தந்ததாம். அதனால் தானோ என்னவோ சீதை அம்மோதிரத்தைத் தன் மார்பின் மீதும், தலையின் மீதும் வைத்தாள். கண்களில் ஒற்றிக் கொண்டாள். உள்ளம் மகிழ்ந்தாள். மகிழ்ச்சியால் உடல் வீங்கியது; மெலிந்து, குளிர்ந்தது. அவள் நீண்ட மூச்சினை விடுத்தாள்.

சீதை மோதிரம் கண்டவுடன் கொண்ட மகிழ்ச்சிக்குக் காரணம் அம்மோதிரம் அழகு செய்த விரல், அவ்விரல் இடங்கொண்ட திருக்கரம், அக்கரங்களுக்கேற்ற திறள் புயம், புயத்திற்கேற்ற மேனி, அம்மேனியின் வண்ணம், இப்படிப் படிப்படியாக அவள் உள்ளம் நிறை நாயகனின் அழகுத் திருவுருவையே காட்டியதால், சீதை போன்ற கற்புடையப் பெண்களுக்கு உள்ளம், உணர்வு, உடல், உயிர், வாழ்வு, இன்பம் எல்லாமே கணவன்தான்.

தன் நாயகன் ஆழி தந்து அதனால் தான் உயிரும் உணர்வும் பெற்றவளாய் இருக்கக் காரணமாக அனுமனைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் பணித்தது. உள்ளம் உணர்ச்சியால் துடித்தது. "அப்பா ஆஞ்சநேயா நீ எவ்வளவு பெரிய செயல் செய்து விட்டாய்".

*மும்மையாம் உலகம் தந்த முதல்வர்க்கு முதல்வன் தூதாய்ச்*
*செம்மையாய் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியதுண்டே*
*அம்மையாய் அத்தனாய அப்பனே அருளின் வாழ்வே*
*இம்மையே மறுமைதானும் நல்கினை இசையோ டென்றாள்.*

"உலகினைப் படைத்த நாயகனாம் பிரம்மாவிற்கும் முதல்வனான நாயகன் தூதனாய் வந்தவனே, நீ எனக்குச் செம்மையாய் உயிர் தந்தாய். என் உயிர்க்கு ஆதாரமான தாரக நாமமாம் ராம நாமத்தை முதலில் அனுப்பி, பின்னர் உன் செயலால் தூதனாய் அறிமுகமாகி, அந்த அழகனின் அழகை வர்ணித்து, அவன் தன்

அருங்குணங்களை இயம்பி, அவன் உரைத்த அடையாளங்களைக் கூறி, அவன்தன் ஆழியும் காட்டியருளினாய். ஆஞ்சநேயா நான் அன்னையைக் கண்டவள் இல்லை. தாய்ப்பாசம் அறியாதவள். தாயென இரங்கி உயிர் தந்தாய். இந்நிலையில் எனக்கு வாழ்வு தந்த தந்தை நீ. அருளே வடிவான ஆஞ்சநேயா எந்தன் இம்மைக்கும் மறுமைக்கும் பெருமை சேர்த்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். என்னால் செய்யக் கூடியது ஒன்று தான். உன்னை நெஞ்சார வாழ்த்துவது தான்'' என்றெல்லாம் சொன்னாள். அவ்வாழ்த்தாய் அமைந்த கம்பனின் வரிகள்

*பாழிய பணைத்தோள்வீர துணையிலேன் பரிவு தீர்த்த*
*வாழியாய் வள்ளலே யான் மறுவிலா மனத்தேன் என்னில்*
*ஊழியோர் பகலாய் ஓதும் ஆண்டெலாம் உலகம் ஏழும்*
*ஏழும் வீழுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள்*

"பெரிய திரண்ட தோள்களை உடைய ஆஞ்சநேயா; எனக்கு உயிரும் வாழ்வும் நல்கிய வள்ளலே நீ வாழ்க. நான் என் இறைவனாம் இராமனையே எண்ணி தவம் செய்த குற்றமில்லாத மனதினையுடையவள் என்பது உண்மையானால் பிரளயகாலம் முழுவதும் ஒரு பகலாய்க் கொண்ட பிரம்மாவின் ஆயுட்காலம் முழுவதும், இந்த 14 உலகங்களும் வீழ்வுற்ற போதும் நீ இன்றுபோல் என்றும் சிரஞ்சீவியாக வாழ்வாயாக'' என்று வாழ்த்தினாள். ஏன் அப்படி வாழ்த்த வேண்டும். உலகில் நல்லது செய்பவர்கள் நிலைத்து வாழ வேண்டும். அதிலும் நல்லறம் என்று கற்றவர் போற்றும் இல்லறம் நடத்துபவர்கள், காலத்தின் சுழற்சியால், சந்தர்ப்பத்தால், சூழ்நிலையால் பிரிய நேரிடின், அவர்களை இணையவைத்து மீண்டும் நல்லறம் வளர்க்க வழிவகுக்கும் உத்தமர்கள் நீண்டநாள் வாழ வேண்டும். அனுமன் காவிய நாயகனாம் இராமன் வாழ்விலும், காவிய நாயகியாம் சீதையின் வாழ்விலும் இன்பம் சேர்த்தான். எனவே வாழ்த்தினாள். இதில் ஓர் அற்புதமான சொற்றொடர் "இன்றென இருத்தி'' என்பது. இதன் பொருள், "இன்று எப்படி எங்கோ உள்ள

என் நாயகனையும், என்னையும் இணைத்து வைக்கும் நற்பணியைச் செய்கிறாயோ அதுபோல் நீ என்றும் எப்போதும் பிரிந்தவர் இணையத் துணைசெய். வாழ்வில் நலிந்தோர்க்கு, இன்று எப்படி எனக்கு உயிர், உணர்வு, வாழ்வு அனைத்தையும் செம்மையாய் அருளினாயோ அப்படி காலமெலாம் நல்லது செய்பவனாக சிரஞ்சீவியாக வாழ வேண்டும்'' என்று வாழ்த்தினாள். இந்த வாழ்த்து வான்மீகியின் வாழ்த்தினின்றும் மாறுபட்டது. வான்மீகியின் வாழ்த்தாக அமைந்த சுலோகத்தின் பொருள். ''வானரோத்தமரே நீர் விக்ரமசாலி, நீர் ஸமர்த்தர், நீ ப்ராக்ஞர் (அறிய வேண்டியவைகளை அறிந்த பெருமைமிக்கவர்) ஆகவே உம் ஒருவரால் அரக்கர்களின் சிறப்பு அழிக்கப்பட்டது (அற்பமாக்கப்பட்டது)'' என்பதுதான். கம்பனின் வாழ்த்து அனுமன் பின்னால் கோயில்கொண்டு, எல்லோருக்கும் நல்லருள் பாலிக்க வேண்டும் என்ற வேட்கையால் பாடப்பட்ட ஒன்று. உண்மையான இராம பக்தன் எல்லோரும் இன்புற்று வாழ நினைப்பவன் என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டும் கம்பன் வரிகள் அன்றோ இன்றும் பல ஆஞ்சநேயர் கோயில்கள் ஏற்பட வழி வகுத்தன.

பின்னர் அனுமன், இராமன் சீதையைப் பிரிந்தது முதல் தான் இலங்கையை அடைந்தது வரை இராமன் வாழ்வில் ஏற்பட்ட அனைத்தையும் விவரித்தான். அவற்றையெல்லாம் கேட்ட சீதை ''அனுமனே நூறுயோசனை தூரம் உள்ள கடலை இச்சிறிய உருக்கொடு எப்படிக் கடந்தாய்?'' என வினவ ''நின் உயிர்த்துணைவனாம் இராமனின் தூயதாள் மனதில் எண்ணுகின்ற நல் உணர்வையுடையவர்கள். மாயையால் ஏற்படும் உலக மயக்கமாகிய கடலையே கடக்கின்றனர் என்றால் இது என்ன பெரிய செயல் என்றான்''. உடனே தன் பேருருவைச் சீதைக்குக் காட்டினான். அது கண்டு திகைத்த சீதை ''போதும் அடங்குவாய்'' என்று சொல்ல அப்பேருருவை அடக்கி பழைய நிலையை அடைந்தான். பின்னர் வானரப் படையின் பெருக்கையும், அவற்றின் ஆற்றலையும் எல்லாம் விளக்கினான்.

பின்னர் சீதையைப் பார்த்து "தாயே தாங்கள் என் தோளின் மீது அமருங்கள். இப்பொழுதே தங்களைத் தங்கள் நாயகனிடம் சேர்ப்பன். அரக்கர்கள் தடுப்பரேல் அனைவரையும் அழிப்பேன். இல்லை இலங்கையோடு உங்களைக் கொண்டு போகவும் வல்லேன். என் அய்யனுக்காக அப்படி ஒரு தொண்டு செய்ய தாங்கள் அருள்புரிய வேண்டும்" என்றான்.

இப்பாடலில் "இப்பேறுபெற என்கண் அருள் தந்தருளு" என்ற வரி காணப்படுகிறது. இராவணன் தன் பலங்கொண்டு பர்ணசாலையோடு கவர்ந்து வந்தான். அதுபோல் என்பலம் கொண்டு தங்களை இலங்கையோடு தூக்கிச் செல்லமுடியும். ஆயினும் நான் இராவணனைப் போல் கீழ்மையன் இல்லை. அவன் தனக்காக அபகரித்தான். நான் என் ஐயனுக்காக உங்களை எடுத்துச் செல்ல நினைக்கிறேன். அந்த இராவணன் உங்கள் சம்மதம் இல்லாமல் உங்களைத் தூக்கி வந்தது மோசம். நான் உங்கள் அனுமதியிருந்தால் உங்கள் நாதன், என் ஐயன் இருக்குமிடம் தூக்கிச் செல்வேன். அது அவர்பால் நான் கொண்ட நேசம். உங்கள் அருளின்றி நான் அதைச் செய்யமாட்டேன். எனவே, தாங்கள் அருள வேண்டும்" என்று சொல்வதன் மூலம் அனுமன் சீதையின் கற்பை எந்த அளவிற்கு மதித்தான் என்பது நன்கு வெளிப்படுகிறது.

அனுமன் இப்படிப் பேசியதைக் கேட்ட சீதை "நீ சொல்லியது அரியது அன்று உனக்கு. நீ செய்வாய். ஆனால் அது உரியது அல்ல. ஏனெனில் அது எனது ஆருயிர் நாயகன் ஆரியனாம் இராமன் கையில் உள்ள வில்லுக்கு மாசுண்டாக்குவது ஆகும். ஆஞ்சநேயா நான் நினைத்தால் இவ்விலங்கை மட்டுமல்ல உலகம் முழுவதும் என் சொல்லால் சுட முடியும். ஆனால் அது என் தூயவன் வில்லுக்கு மாசு என்று கருதியதால் அந்நினைவையே வீசிவிட்டேன்" என்றும் கூறினாள்.

பின்னர் ஆஞ்சநேயரைப் பார்த்துப் பின்வரும் செய்திகளைக் கூறினாள்.

“ஆஞ்சநேயா ஒரு மாதம் தான் நான் இங்கு இருப்பேன். அதற்குள் வந்து என்னைச் சிறை மீட்கவில்லையெனில் நான் உயிருடன் இருக்க மாட்டேன்” என்று சொல்.

“அனுமனே மாலை தாழும் மார்புடைய என் நாயகர்க்குச் சொல், நான் தாரம் என்பதற்காக இல்லாவிட்டாலும், அவர் மனதில் கருணை உள்ளது என்பதற்காக இல்லாவிட்டாலும், அவர் வீரத்தை நிலைநிறுத்தவாவது என்னை மீட்டுச் செல்ல வேண்டும்” என்று சொல்.

“அனுமனே! இளையவரைப் பார்த்து சொல். இராமன் ஆணையால் காவல் இருந்தபோது சொல்லக்கூடாத வார்த்தையைச் சொன்னதற்காக எனக்குச் சிறையில் சிறைவீடு” என்று சொல்.

“அனுமனே! இன்னும் ஒரு மாதத்தில் என் நாயகன் இராமன் இங்கு வந்து என்னை சிறை மீட்கவில்லையெனில், அப்படியே அயோத்திக்குத் திரும்பப் போகச்சொல். போகும் வழியில் கங்கையாற்றின் கரையில் அவர் கையால் எனக்குக் நீர் கடன் இயற்றச் சொல்”.

“அனுமனே! எனது மாமியார் மூவருக்கும் இறக்கும் தருணத்திலும் சீதை உங்களைத் தொழுதாள் என்று சொல். அவருக்கு என்மேல் அருளில்லை. அவர் மறந்தாலும் நீ மறக்காமல் சொல்”.

“அனுமனே! அவர் என்னைத் திருமணம் செய்து கொண்ட காலத்தில் இப்பிறவியில் வேறு மாதரைச் சிந்தையாலும் தொடேன்” என்று சொன்னார். என்னை மறந்தது போல் வார்த்தையையும் மறந்துவிடப் போகிறார். நினைவுபடுத்து.”

“இங்கு நான் உயிர் நீத்தாலும் மீண்டும் வந்து பிறந்து அவர் மேனியைத் தழுவும் பாக்கியம் பெற வரம் வேண்டினேன் என்று சொல்”. என்றெல்லாம் சொல்லிப் பின்னர் ஆஞ்சநேயரிடம்,

*எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்கும் என்*
*வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச்*

*சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்து போய்*
*அந்தமில் நெடு நகர்க் கரசனாக் கென்பாய்*

"ஆஞ்சநேயா இன்னும் ஒரு மாதத்திற்குள் என்னை வந்து மீட்கவில்லையெனில் அப்படியே அயோத்தி நோக்கி அவரை செல்லச் சொல். அங்கு அவர் வருகைக்காகக் காத்திருக்கும் மக்கள் பதினான்கு ஆண்டுகள் முடிந்தவுடன் ராமன் வரவில்லையே என்று மனம் தளர்வார்கள். அன்னையர்கள் கோசலை, சுமித்ரை, கைகேயி ஆகியவர்கள் தனயன் வரவில்லையே என்று துன்பப்படுவார்கள். பரதனோ தமையன் வரவில்லையே என்று தீ புகுநினைவான். எனவே, இவை நடக்காமல் இருக்க அயோத்தி செல்லச் சொல். முடிவாக ஒன்று எல்லோர்க்கும் என் வந்தனத்தைச் சொல். நீ உன் தலைவனாம் சுக்ரீவனையும், என நாயகனாம் சுந்தரத் தோளனையும் தொடர்ந்து அவர்களை என்னைக் காப்பாற்றியது போல் காப்பாற்றி அயோத்திக்கு அழைத்துச் சென்று அரசனாக்கு" என்றாள் சீதையின் இவ்வார்த்தைகளைக் கேட்டு மனம் வெம்பி சற்று வருத்தத்துடன் கீழ்வரும் செய்திகளைக் கூறினான் அனுமன்.

*வீவாய் நீ இவண் மெய் அஃதே*
*ஓய்வான் இன்னுயிர் உய்வானாம்*
*போவான் அந்நகர் புக்கன்றே*
*வேய்வான் மௌலியும் மெய்யன்றோ*

இப்பாடலில் தான் எவ்வளவு நகைச்சுவை இழையோடும் உறுதியான சொற்கள் "மிக நன்றாயிருக்கிறது நீங்கள் இங்கே இறந்து படுவீர்களாம். உங்கள் பிரிவினைலேயே தளர்ந்து போனவன், நீங்கள் இறந்தது கேட்டு உயிர் வாழ்வானாம்! அயோத்திக்குச் செல்வானாம்! முடிசூட்டிக் கொள்வானாம்?" என்றான் "அதுமட்டுமல்லாமல் உங்களை சிறை மீட்காமல் அயோத்தி செல்வானா?"

*மாட்டாதார் சிறை வைத்தோயை*
*மீட்டோம் என்கிலம் மீள்வாமல்*

*நாட்டார் நல்லவர் நல்நூலும்*
*கேட்டார் இவ்வுரை கேட்பாரோ*

“எதிரிகளால் சிறை வைக்கப்பட்டாளாம் மனைவி. அவளை மீட்டானாம் இராமன் என்பான்” என்று தான் நாட்டார் நல்லுரை கேட்பாரே அன்றி மீட்கவில்லை தான் தனியாக அயோத்தி திரும்பினான் ராமன் என்று அயோத்தியில் உள்ளவர்கள் கேட்பார்களா? நல்ல நூல்களைக் கற்றவர்கள் தான் கேட்பார்களா?” என்று சொல்லி ஒரு போதுமில்லை என்று உணர வைக்கிறான். முடிவாகச் சீதையிடம் அனுமன்.

*சின்னாள் நீ இடர் தீராதாய்*
*இன்னா வைகலின் எல்லோரும்*
*நன்னாள் காணுதல் நன்றன்றோ*
*உன்னால் நல்லறம் உண்டானால்*

“அம்மா! சில நாள்களில் உங்கள் இடர்தீரும். உங்கள் இடர் மட்டுமல்ல. துன்பத்தில் உள்ளவர்கள் எல்லோரும் நன்னாள் காண்பர். காரணம் உங்கள் நல்லறமாம் கற்பின் திறன் அது நன்மையே செய்யுமன்றோ” என்றெல்லாம் கூறுவான். பின்னரும் உறுதிகூறுவான் அனுமன்.

*எண்ணரும் பெரும்படை ஈண்டி இந்நகர்*
*நண்ணிய போழ்தத்து நடுவண் நங்கை நீ*
*விண்ணுறக் கலழன் மேல் விளங்கும் விண்டுவின்*
*கண்ணனை என்நெடும்புயத்தில் காண்டியால்*

*அங்கதன் தோள்மிசை இளவல் அம்மலை*
*பொங்கு வெங்கதிர்எனப் பொலியப் போர்ப்படை*
*இங்கு வந்து இறுக்கும் நீ இடரின் எய்துறும்*
*சங்கையும் நீங்குதி தனிமை நீங்குவாய்*

*குராவரும் குழலி நீ குறித்த நாளினில்*
*விராவரும் நெடுஞ்சிறை மீட்கிலான் எனில்*

*பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு*
*இராவணன் அல்லனே இராமன் என்றனன்*

"அம்மா எண்ணிலா வானரங்கள் இந்நகரின்கண் எய்தப் போவதும் உறுதி. அவ்வமயம் அப்படையின் இடையில் விண்ணில் கருடன் மீது விஷ்ணு வந்து தோற்றுமாப்போல் எனது நீண்ட தோளில் உன் நாயகனாம் கருணையாளனைக் காணப்போவதும் உறுதி. அதுமட்டுமல்ல அங்கதன் தோளின் மிசை இம்மலையினின்றும் தோற்றுகின்ற ஆதவன் நிகரென இளையபெருமாள் அழகுடன் வீற்றிருக்க, பெரியதோர் வானரப் போர்ப்படை இவ்விலங்கையில் வந்து அரக்கர்களை அழிக்கும் என்பது உறுதி. நீங்கள் துன்பத்தினால் அடைந்துள்ள சந்தேகமும் நீங்கும். உமது தனிமையும் நீங்கும் இதுவும் உறுதி".

"முடிவாக தாங்கள் குறிப்பிட்டுள்ள அந்த ஒரு திங்களில் நீங்கள் அனுபவிக்கும் இத்தனிமைச் சிறையிலிருந்து மருதோன்றித் தைலம் கமழும் குழலினை உடைய உம்மை இராமன் மீட்பான். அப்படி மீட்கவில்லை எனில் உலகில் பழியை ஏற்பவன் இராவணன் அல்ல இராமன் தான் (இதில் ஒரு நயம் உங்களை மீட்காமல் உலகில் பழியை ஏற்றுக்கொள்ள இராமன் என்ன இரக்கமேயில்லாத இராவணன் என்றா எண்ணுகிறீர்கள். நிச்சயம் இல்லை. ராமன் பழிக்கு அஞ்சுபவன். உம்மைச் சிறைமீட்பான்.") என்றெல்லாம் உறுதி கூறினான்.

**அனுமன் கூறிய உறுதி உரைகளைக் கேட்ட சீதை**

*நாகம் ஒன்றிய நல்வரையின் தலை மேநாள்*
*ஆகம் வந்தெனை வள்ளுகிர் வாளின் அளைந்த*
*காகம் ஒன்றை முனிந்தயல் கல்எழு புல்லால்*
*வேக வெம்படை விட்டது மெல்ல இசைப்பாய்*

*ஐய நின் சரணம் சரண் என்று அவன் அஞ்சி*
*வையம் வந்து வணங்கிட வள்ளல் மகிழ்ந்தே*

*வெய்யவன் கண் இரண்டொடு போகென விட்ட*
*தெய்வ வெம்படை உற்றுள தன்மை தெரிப்பாய்*

*எந்தை நின்சரணம் சரண் என்ற இதன்னால்*
*முந்தை நின் குறையும் பொறை தந்தனம் முந்துன்*
*சந்தம் ஒன்று கொடித்திறன் கண்கள் தமக்கே*
*வந்தொர் நன்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய்*

இம்மூன்று பாட்டாலும் தன்னிடம் தவறிழைத்த இந்திரன் மகனாம் ஜயந்தன் காகம் உருகொண்டு ராமன் கணையால் பட்ட பாட்டினை விவரிப்பாளாயினாள். "ஒரு சமயம் மரங்கள் நிறைந்த மலையடிவாரத்தில் காகம் ஒன்று வந்து என் உடலில் தன் கூரிய கால் நகங்களால் கீறி புண்ணாக்க, அச்செயல் கண்டு கோபங்கொண்ட என் நாயகன் அக்காகத்தின் மீது, தான்படுத்திருந்த கல்லின்கீழ் இருந்து ஓர் கூறிய புல்லினை எடுத்து அதையே பிரம்மாத்திரமாக ஏவினார்."

"அந்த அத்திரத்தால் அஞ்சி அனைத்துலகும் ஓடிய அக்காகம் தன்னை ஆற்றுவாரும், தேற்றுவாரும், காப்பாற்றுவாரும் காணாது முடிவில் என் நாயகன் திருவடிகளில் அடைக்கலம் என்று வீழ, "உயிரையே இலக்காக உடைய அந்த அத்திரம் உன் இரண்டு கண்களை மட்டும் அழித்து விடட்டும்" எனக் கூறியதோர் செய்தியைத் தெரிவிப்பாய்

மீண்டும் அக்காகம் "இரண்டு கண்களையும் இழந்த நான் எங்ஙனம் என் உணவினைப் பெறுவேன். எந்தையே நீயே அடைக்கலம்" என்று வேண்ட, "உன் பிழையைப் பொறுத்துக் கொண்டும், உனக்கு மட்டுமல்ல உன் இனத்தவர்க்கும் நீங்கள் உணவினைப் பெறும் நிலையில் ஒரே ஒரு கண்மணியை அளிப்பன். எந்தப் பக்கமும் பார்க்கிறீர்களோ அப்பக்கம் அம்மணி அமையும் நிலையும் அளிப்பனன் என்று கூறிய அருளையும் அறிவிப்பாய்" என்றெல்லாம் கூறினாள்.

அதன் பின்னர் அனுமனிடம் தான் தன் துணியில் முடித்து வைத்திருந்த சூடாமணியைக்

*என்று உரைத்து இனிது இத்தனை பேரடையாளம்*
*ஒன்று உணர்த்துவது இல் என எண்ணி உணர்ந்தாள்*
*தன் திருத்துகிலில் பொதுவுற்றது தானே*
*வென்றது அச்சுடர் மேலொடு கீழுற மெய்யால்*

*சூடையின் மணி கண்மணி ஒப்பது தொல்நாள்*
*ஆடையின் கண் இருந்தது பேரடையாளம்*
*நாடி வந்தெனது இன்னுயிர் நல்கினை நல்லோய்*
*கோடி என்று கொடுத்தனள் மெய்புகழ் கொண்டாள்*

கொடுத்தாள். அதைக்கூறும் கம்பனின் வரிகளின் பொருளழகு. "ஆஞ்சநேயா இத்தனை நேரம் நான் சொல்லிய அனைத்து அடையாளங்களையும் உணர்த்துவது இதுவன்றி வேறுபொருள் இல்லை" என்று தான் உணர்த்த திருத்துகிலில் முடித்து வைத்திருந்ததும், இவ்வுலகும், மேலுலகும், கீழுலகும், பாதாள உலகும் ஒளிவீசும் ஆற்றல் உள்ளதுமான சூடாமணியைக் காட்டினாள்.

"நான் இருக்கும் இடம் தேடிவந்து என் உன்னுயிராம் ராமன் திருநாமம் சொல்லி, திருமேனி அழகுரைத்து, திடமாரும் வலியுரைத்துப் பின் திகழ் புகழின் ஆழியையும் காட்டி எந்தனைக்காத்த ஆஞ்சநேயா இந்த சூடாமணி அவருக்கு அனைத்தையும் உணர்த்தவல்ல பேரடையாளம்" என்று உரைத்து அளித்தாளாம்.

சூடாமணியைப் பெற்றுக்கொண்ட அனுமன் சீதையிடம் விடை பெற்றான். இராவணனுக்குத் தன் வருகையை அறிவிக்க விரும்பினான். அருகில் இருந்த பொழிலை அழித்தான். வனத்திற்குக் (சோலை) காவல் இருந்தவர்கள் இராவணனிடம் முறையிட்டார்கள். இராவணன் ஆஞ்சநேயரைப் பிடிக்க கிங்கரர்களை ஏவினான். அவர்களோடு போரிட்டு அவர்களை அழித்தான் அனுமன். பின்னர் இராவணன் பிரகத்தன் மகனான சம்புமாலியை ஏவினான். அவனையும் அனுமன் போரில் கொல்ல இராவணன் தானே

அனுமனைப் பிடிப்பான் கிளம்ப (புறப்பட) அவனைத் தடுத்து அவனது ஐந்து சேனாதிபதிகளான விரூபாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரன், பிரகஸன், பாஸகர்ணன் என்னும் ஐவர் புறப்பட்டனர் அனுமனைப் பிடிக்க. அனுமன் பேராற்றல் மிக்க ஐவரையும் போராற்றல் காட்டி மடித்தான். மடிந்தனர் பஞ்ச சேனாதிபதிகள் என்றறிந்த இராவணன் மறலியை ஒத்த தன் மகன் அக்ஷய குமாரனை அனுமனைப் பிடிக்க ஏவினான். அந்த அக்ஷய குமாரனை அடித்துத் தரையில் போட்டுத் தேய்த்தனன் அனுமன். செய்தியறிந்தான் இராவணன். வேதனையோடு சீற்றமும் கொண்ட அவன் தன் மகனாம் இந்திரஜித்தை அனுமானைப் பிடிப்பான் அனுப்ப எண்ணி அவனையழைத்து அவனிடம் நடந்த செய்திகள் அனைத்தையும் கூறினான். தம்பி இறந்தான் என்றதைக் கேட்டதும் துன்பமும், கோபமும் கொண்டான். இந்த்ரஜித் தன் தந்தையைப் பார்த்து,

*ஒன்று நீ உறுதி ஓராய் உற்றிருந்து உளையகிற்றி*
*வன்திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும் அன்னோ*
*சென்று நீர் பொருதிர் என்று திறத்திறம் செலுத்தி தேயக்*
*கொன்றனை நீயே யன்றோ அரக்கர் தம் குழுவை என்றான்.*

“தாங்கள் நம் அரக்கர் குலத்திற்கு எது உறுதி சிந்திக்காமல், காற்றும் புகமுடியா கடிநகர் இலங்கை புக்கு, கண்டது சீதையை குரங்கென்று என்று அறிந்தும், அம்பொழில் அழித்தது அது தன் ஆற்றல் காட்டி அனுப்பிய வீரர் தம்மை வீட்டிய தென்றும் உணர்ந்த பின்னும், சிறிது சிறிதாக படையை அனுப்பி அனைவரையும் நீரன்றோ அழித்தீர். அக்ஷயன் அழிந்தான் என்று அவலமே கொண்டு நின்றீர்” என்றெல்லாம் சீறினான். பின்னர்,

*ஆயினும் ஐய நொய்தின் ஆண்தொழில் குரங்கையானே*
*ஏ எனும் அளவில் பற்றித் தருகுவென் இடர் என்று ஒன்று*
*நீ இனி உழக்கற் பாலை அல்லை நீடு இருத்தி என்னாப்*
*போயினன் அமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான்*

அயர்வுறும் அமரர்தம் தலைவனாம் இந்திரன் தன்னை வென்று அவன் புகழ் மங்குமாறு "இந்திரஜித்" என்று பெயர் கொண்டவனாம் அவன் ஆயினும் "தந்தையே இனி நீங்கள் துன்பத்தால் கவலைப்படத் தேவை இல்லை. நீங்கள் நிம்மதியாய் இருங்கள். நான் இப்போதே சென்று ஏயெனும் சொல்லும் அளவையில் அவ்வனுமனைப் பற்றிக் கொணர்வன்" என்று கூறிப் போருக்குக் கிளம்பினன். இந்திரஜித் போருக்கு வருவதையறிந்த அனுமன் தன் உள்ளத்தில் எண்ணினான்.

*ஒன்றோ இதனால் வரும் ஊதியம் ஒண்மையானைக்*
*கொன்றேனெ ணனில் இந்திரனும் துயர்க் கோளும் நீங்கும்*
*இன்றே குடிகெட்டது அரக்கர் இலங்கை மூதூர்*
*வென்றேன் அவ் இராவணன் தன்னையும் வேரொடு என்றான்*

"இன்று இப்போரில் இந்த இந்திரஜித்தை கொன்று விடுவேனாகில் அதனால் வரும் நன்மைகள் ஒன்றா? இரண்டா? எத்தனை எத்தனை ஊதியங்கள் இந்திரன் துயரம் தீரும். இலங்கை மூதூர் அரக்கர் குடிகெடும். அதுமட்டுமல்ல இவனை வென்றுவிட்டால் அந்த இராவணன் அவனை பூண்டோடு வென்றுவிடுவேன்" என்று.

அனுமனும் இந்திரஜித்தும் போரிட்ட காலை யானைப்படையை அழித்தான் அனுமன். யானைப் படை மட்டுமா! குதிரைப்படை, தேர்படை, காலாட்படை அனைத்தையும் அழித்தான். அடல்மிகு போர் கண்ட இந்திரஜித்.

*நல்லை நல்லை இஞ்ஞாலத்துள் நின் ஒக்கும் நல்லார்*
*இல்லை இல்லையால் ஏறும் வலிக்கு யாரொடும் இகல*
*வல்லை வல்லை இன்று ஆகும் நீ படைத்துள வாழ்நாட்கு*
*எல்லை எல்லை என்று இந்திர சித்துவும் இசைத்தான்*

"நன்று நன்று உன் ஆற்றல், இவ்வுலகில் உனக்குச் சமமான நல்வீரன் யாரும் இல்லை. அது மட்டுமல்ல என்னுடைய பலத்திற்குச் சமமான பலம் உள்ள வீரன் நீ. நீ யாரோடும் போரிட வல்லவன். ஆயினும் இன்று இப்போரில் உன்வலிக்கு மட்டுமல்ல உன்

வாழ்நாளுக்கும் எல்லையையே நீ காணப்போகிறாய்'' என்று சொன்னான். அதைக் கேட்ட அனுமன் சொல்லுவான்.

*நாளுக்கு எல்லையும் நிருதராய் உலகத்தை நலியும்*
*கோளுக்கு எல்லையும் கொடுந்தொழிற்கு எல்லையும் கொடியீர்*
*வாளுக்கு எல்லையும் வந்தன வகை கொடு வந்தேன்*
*தோளுக்கு எல்லை ஒன்றில்லை என்று அனுமனும் சொன்னான்.*

கொடுமையே உருவமான அரக்கர்களே! இந்த நாள் உண்மையிலேயே எல்லை நாள்தான். எவற்றிற்குத் தெரியுமா? அரக்கர்களாய் உலகத்தை வாட்டா நின்றீர்களே அந்த நாள்களுக்கு எல்லை. நீங்கள் செய்த கொடுமையாம், என் தலைவன் தேவியைச் சிறைவைத்த செயல் அதன் விளைவாம் உங்கள் அழிவற்கு எல்லை. உங்கள் ஆயுதங்கள் அனைத்திற்கும் எல்லையாம் என் தோள் வலி கொண்டு வந்தேன். ஆனால் எல்லையில்லாத ஒன்றையும் 2 டன் கொண்டு வந்தேன் அது என்ன தெியுமா என் தோள்'' என்றான்.

பின்னர் இருவரும் பொருதனர். இந்திரஜித் மாருதியால் அடிக்கப்பட்டவனாய் வசம் இழந்தான். பின்னர் தெளிந்து கோபம் கொண்டவனாய் ஆயிரம் பகழிகளை விடுத்தான். அக்கணைகளுடன் சென்று இந்திரஜித்தை அவனமர்ந்த தேரொடும் வீசி எறிந்தான். இந்திரஜித் விண்ணளவு சென்று பின்னர் தேரோடும் பார்மிசை விழுந்தான். உடனே வேறு வழி காணாதவனாய் பிரம்மாத்திரத்தை ஏவினான். அப்பிரம்மாத்திரம் தன்னை ஒன்றும் செய்யாது என்று நினைத்தும், தெய்வப் படைக்குக் கட்டுப்படுதல் வேண்டும் என்று கருதியும் கண்மூடி நின்றான். அவனைப் பிணித்து அரசவைக்குக் கொண்டு சென்றனர். இராவணன் இருந்த நிலைகண்டு வியக்கிறான் அனுமன். இராவணன் அனுமனை நோக்கி,

*நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ*
*தாமரைக் கிழவனோ தறுகண் பஃறலைப்*
*பூமி தாங்கு ஒருவனோ பொருது முற்றுற*
*நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்*

"இவ்விலங்கையின் கண் புக்கு இராக்கதர் தம்மோடு பொருது அனைவரையும் அழிப்பான் பொருட்டு பெயரையும், உருவையும் மறைத்துவந்த நீ சக்ராயுதம் ஏந்திய விஷ்ணுவா? வச்ராயுதம் தரித்த தேவேந்திரனா? சூலாயுதம் தரித்த சிவபெருமானா? தாமரை மலரில் வைகும் பிரம்மாவா? இல்லை ஆயிரம் தலைகள் கொண்டு அவனிதாங்கும் ஆதிசேனா?"

*நின்று அசைத்து உயிர் கவர் நீலக்காலனோ*
*குன்று அசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ?*
*தென் திசைக் கிழவனோ திசை நின்றாட்சியர்*
*என்றிசைக் கின்றவர் யாருள் யாவன் நீ*

"உலகின் கண் வாழும் உயிர்கள் அவை காணாமல் உடன்நின்று காலம் வரும்போது அவற்றை மனங்கலங்கும்படி செய்து உயிரைக் கவரும் கரிய நிற யமனா நீ? கிரௌஞ்ச மலை பொடிப் பொடியாக ஒரு தனிச்சுடர்வேல் எறிந்த முருகனோ நீ? திசைக்காவலராய் விளங்கும் எட்டுதிக் பாலகர்களில் தென்திசைக்கு அதிபதியாக தருமமே உருக்கொண்ட காலனா நீ? இல்லை அவர்களில் யாவன் நீ?"

*அந்தணர் வேள்வியின் ஆக்கி ஆணையின்*
*வந்துற விடுத்த தோர் வயவெம் பூத மோ*
*முந்தொரு மலருளோன் இலங்கை முற்றுறச்*
*சிந்தெனத் திருத்திய தறுகண் தெய்வமோ?*

"மறைவல்ல அந்தணர் வேள்வியைச் செய்து அம்மறை பொருளின் ஆணையால் இவ்விலங்கை வீழ்த்த அனுப்பிய பூதமா நீ? இல்லை இவ்விலங்கையைப் படைத்த பிரம்மா இதை அழிப்பது என்று முடிவு செய்து, படைத்த தானே அழிப்பது முறையன்று என்றி கருதி, அழிப்பான் பொருட்டு அனுப்பிய ஆற்றல் மிகு தேவனோ நீ?"

*ஆறைநீ என்னை யிங்கு எய்து காரணம்*
*ஆர் உனை விடுத்தவர் அறிய ஆணையால்*

*சோர்விலை சொல்லுதி என்ன சொல்லினான்*
*வேரொடும் அமரர்தம் புகழ் விழுங்கினான்*

"யார் நீ? இங்கு வந்த காரணம் யாது? உன்னை அனுப்பியவர் யார்? யாருடைய ஆணையால் எம்மையும் எம் வலிமையும் அறிய வந்தனை! என் ஆணையிது. நீ மனம் சோர்வு அடையாமல் நான் அறிய உண்மையைச் சொல்" என்றெல்லாம் சொன்னான். அமரர் தம் புகழ் அடியோடு களைந்த அவ்விராவணன்.

**இராவணன் கூறிய அனைத்தையும் கேட்ட அனுமன்**

*சொல்லிய அனைவரும் அல்லென் சொன்ன அப்*
*புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்*
*அல்லியங் கமலமே அனைய செங்கண் ஓர்*
*வில்லிதன் தூதன் இலங்கை மேயினேன்*

என்றான். இப்பாடல் எத்தனை அழகியது, எத்தனை செய்திகளை உள்ளடக்கியது, சிந்திப்போம்.

நீ சொன்ன விஷ்ணுவோ, சிவனோ, இந்திரனோ, பிரம்மனோ இல்லை. உன்னுடைய தவத்தால் மனிதர்களைத் தவிரவேறு எவராலும் உனக்கு மரணம் வரக்கூடாது என்று வரம் பெற்றுவிட்ட காரணத்தால், அவ்வரத்தை மதிப்பான். பொருட்டு அவர்கள் புல்லிய வலியினோர் ஆயினர். ஆனால் ஒரு வில்லை ஏந்தியவனாய் தாமரை, அல்லி இவைகளை ஒத்த செம்மையான கண்களையுடையவனாய் இம்மண்மிசை வந்துள்ள ஒருவன் தூதன். அவன் யார் தெரியுமா? மண்ணை ஆளா நின்ற தயரதன் மைந்தன் ராமன். தயரதன் மைந்தன் தானே என்று அலட்சியமாகவும் இருந்து விட முடியாது ஏன் தெரியுமா? தயரதன் மகனாக வந்தவனோ முடிவே இல்லாத வேதங்களினால் காட்டமாட்டாதான் அறிவினுக்கு அறிவான வாலறிவன். யானையொன்று முதலையின் வாய்ப்பட்ட போது ஆதிமூலமே என்று அழையா நிற்ப அதன் முன்னர் அலைகுலைய, தலைகுலைய வந்து அதன் இடர் தீர்த்த ஆதிமூர்த்தி, வாரணம் காத்தவன் வானவர்காக்க வந்தான்.

*மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய*
*காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்தி*
*சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை*
*ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்*

அவன் ஆதிமத்யாந்த ரஹிதன். அதாவது ஆதியும் இல்லை. அந்தமும் இடைப்பட்ட எளிய வாழ்வும் இல்லை. ஆயினும் உன்வரத்தை நீ மதிக்காத போதிலும் அந்த இறைவன் மதிப்பான் பொருட்டு பிறந்தான் என்று உலகம் சொல்ல, கௌசலைதன் மதலையாய் பிறந்து, மனிசர்க்காய்ப் படாத பாடுபட்டு உன்னால் துயர் விளைக்கப்பட்டவனாய் மனிதனாக வாழ்ந்து கையிலே வில்லை ஏந்தி வந்திருக்கிறான். அவன் காலத்தையும், வாழ்வின் கணக்குகளையும் நீத்தவன். சொல்லப்போனால் காலதத்துவமும் வாழ்வின் கணக்குகளும் அவனால் உண்டாக்கப்பட்டவை. சூலம் ஏந்தி அலைகடல் மிசை அனந்தன் அமளியில் அரிதுயில் கொண்ட விஷ்ணுவாய், கையில் கரகம் ஏந்தியவனாய் தாமரை மலரில் அமர்ந்து மலரோன் என்று விளியா நின்ற பிரம்மனாய் இருந்தவனும் நாராயணன்தான் அவனிகாக்கும் அயோத்தியர் கோன் தயரதன் தன் மகனாய்த் தோன்றி வந்திருக்கிறான்.

*அறந்தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்*
*திறந்தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்*
*இறந்துக நூறித் தக்கோர் இடர் துடைத்து ஏக ஈண்டுப்*
*பிறந்தனன் பிறவி நோய்க்கு மருந்திவன் பிறிதொன்றுண்டோ?*

“அந்த நாராயணன் மண்மிசை மனிதனாக வந்ததன் காரணம் கேட்க விரும்புகிறாயா? சொல்கின்றேன் கேள் இம்மண்ணுலகில் அறம் நிலைபெற வேண்டும் என்று எண்ணிய வேதம், அடிப்படையான சில தர்மங்களை அருளால் அறுதியிட்டுக் கூறியுள்ளது. அவை என்ன தெரியுமா? (மாத்ரு தேவோ பவ, பித்ருதேவோ பவ, ஆசார்ய தேவோ பவ) அன்னையையே தெய்வமாகக் கொண்டிரு, தந்தையையே தெய்வமாகக் கொண்டிரு. ஆசார்யனையே தெய்வமாகக் கொண்டிரு

என்றெல்லாம் கூறியதோடு ஸத்யம் வத; தர்மம் சர; உண்மையே பேசு; அறவழியில் நட என்று கூறியதே அதை இவ்வுலகம் பின்பற்ற வேண்டுமென்பதற்காக வேதநாயகனே மனிதனாய்ப் பிறந்து அவற்றைப் பின்பற்றிக் காட்ட எண்ணினான். செந்நெறியைக் காட்ட நண்ணினான் நரனாய். அதுமட்டுமல்ல அந்த அறநெறியை மறந்து வரபலம், பலபணம், படைபலம் இவற்றால் மாற்றான் மனைவியைக் கூட அபகரிக்கலாம் என்று வேடமிட்டு மோசம் செய்யும் உன்போன்ற தீயோர்களைக் கொன்று, உன்னால் பாதிக்கப்பட்டு, உன் வரத்தால் பாதிக்கப்பட்டு, உன்னைப் பொறுத்தவரையில் ஏதும் செய்ய இயலாதவர்களாய்ப்போன தேவர்களின் துன்பங்களைவான் வந்த தெய்வமகன் ராமன். அவன், பிறவி என்னும் நோய்க்கு மருந்தாகவும் ஆவான். அவனது தொண்டனாய் இருப்பவன் நான். என் பெயர் அனுமன். இராமன் தேவியாம் சீதையைத் தேடுவான் சுக்ரீவனால் ஏவப்பட்டு தென்திசை வந்த அங்கதன் தலைமையிலான வானரப் படை வீரர்களில் ஒருவன். நான் தூது வந்த செய்தியைச் சொல்கிறேன்.

*வறிது வீழ்த்தனை வாழ்க்கையை மன்அறம்*
*சிறிதும் நோக்கலை தீமை திருத்தினாய்*
*இறுதி உற்றுளதாயினும் இன்னும் ஓர்*
*உறுதி கேட்டி உயிர் நெடிது ஓம்புவாய்*

“முயன்றுடைய தவம், முக்கோடி வாழ்நாள் எல்லாம் தவத்தால் பெற்ற நீ அவற்றால் வாழ முடியாது வீணாக அழிக்கத் துணிந்தாய். அரச அறம் பிழைத்தாய். தீமை செய்தாய். உன் செயலால் அழிவு உன்னைத் தேடிவரும் அந்த நிலையிலும் ஒரே ஒரு உறுதி. நன்மை செய்ய வல்ல செயல். நீண்ட நாள்கள் வாழ வேண்டும் என்ற எண்ணம் உனக்கு இருக்குமாயின் அதைக்கேள்”.

*தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாதெனும்*
*வாய்மை நீக்கினை மாதவத்தால் வந்த*
*தூய்மை தூயவள் தன்வயின் தோன்றிய*
*நோய்மையால் துடைக்கின்றனை நோக்கலாய்*

"நீ நன்கு கற்றவன். தீமை, நன்மையை அழிக்க முடியாது என்னும் உண்மையை உணர்ந்தவன். ஆயினும் அதனை மறந்துவிட்டாய். நீ ஆற்றிய பெருந்தவம்; அதன் பெருமை, அதனால் வந்த தூய்மை அத்தனையும் தூயவளாம் சீதையின் பேரில் தோன்றிய தகாத எண்ணம் என்ற அற்பச் செயலால் கொஞ்சம் கொஞ்சமாக அழிக்கத் துணிந்து விட்டாயே. அதன் பலனாய் பல அரக்கர்களை, உன் மகன் அக்ஷயகுமாரனைப் பறிகொடுத்த பிறகும் சிந்தித்துப் பார்க்க மறந்து விட்டனையே"

*ஆதலால்தன் அரும் பெறல் செல்வமும்*
*ஓது பல்கிளையும் உயிரும் பெறச்*
*சீதையைத் தரு கென்றெனச் செப்பினான்*
*சோதியான் மகன் நிற்கெனச் சொல்லினான்*

"ஆதலால் நீ செய்த தவத்தாலும் வரத்தாலும் பெற்ற செல்வமும், உனக்கு உறவினர்களாய் உலகே போற்றும் கும்பகர்ணன் போன்றவர்களின் உயிரும், ஏன் உன் உயிருங்கூட அழியாமல் இருக்க இராமன் துணைவியாம் சீதையை ராமனிடம் நல்லபடியாக ஒப்படைப்பது ஒன்றுதான் சிறந்த வழி என்று எங்கள் நாயகன் சுக்ரீவன் உனக்குச் சொல்லச் சொன்னான்" என்றெல்லாம் அறிவுரை கூறினான் அனுமன்.

அனுமன் கூறிய அறிவுரைகளால் ஆத்திரங்கொண்ட அவ்வரக்கன் அனுமனைக் கொன்றுவிட ஆணையிட்டான். அது கேட்ட வீடணன், "தூதுவரைக் கொல்வது அரச நீதியல்ல. அவர்கள் கடுமையாகப் பேசி இகழ்ந்தாலும் அவர்களுக்கு ஏதாவது தண்டனை கொடுக்கலாமே தவிர அவர்களைக் கொல்வது அறமல்ல" என்று எடுத்துக் கூறினான். உடனே இராவணன், "குரங்குகளுக்கு அவற்றின் வாலின் மீது அளவு கடந்த விருப்பம். எனவே, இக்குரங்காம் அனுமன் வாலில் நெருப்பை வைத்து விடுங்கள். கருகிய வாலுடன் செல்லட்டும். அது மற்ற வானரங்களுக்குப் பாடமாக அமையட்டும்" என்று ஆணையிட்டான். உடனே அரக்கர்கள் பழைய ஆடைகள், கோணிகள்

இவைகளினால் வாலில் பிணித்து வாலுக்குத் தீயுமிட்டனர். அனுமன் வாலில் தீயை வைத்து விட்டனர் என்று அறிந்த அக்கற்பின் கனலியாம் சீதை,

*தாயே அனைய கருணையான் துணையை ஏதும் தகவில்லா*
*நாயே அனைய வல்லரக்கர் நலியக்கண்டால் நல்காயோ*
*நீயே உலகுக்கு ஒரு சான்று நிற்கே தெரியும் கற்பினால்*
*தூயேன் என்னில் தொழுகின்றேன் எரியே அவனைச் சுடல் என்றாள்*

"தாயைப் போன்ற கருணையுள்ளவனாம் என் நாயகன் தூதனாய் வந்து என்பால் தாயைப் போல் பரிவுகாட்டி, நான் உயிர்வாழ ராமநாமம் என்னும் அமுதூட்டி மாள இருந்த என்னை வாழவைத்த இந்த அனுமனை தகவே இல்லாத அரக்கர்கள் வாலிலே தீமூட்டிக் கொடுமை செய்கிறார்களே எரியே,! இந்த உலகில் அறத்திற்கும், பெண்கள் கற்பிற்கும் நீயே நிலையான சாட்சி. உன்னை சாட்சியாக வைத்துச் சொல்கிறேன், நான் என் மனம், வாக்கு, செயல்களினால் தூய்மையானவள் என்பது உண்மையானால், இராமனையே எப்பொழுதும் நினைந்து நினைந்து தவம் செய்து கொண்டு இருக்கும் தூய்மையள் நான் என்பது உண்மையானால் உன்னை வணங்கிக் கேட்கிறேன். அனுமன் வாலில் பற்றி எரியும் நீ அவனைச் சுடக்கூடாது" என்று சொன்னாள். கற்பின் கனலியின் முன்னாள் எரியும் தன்நிலைமாறியது. அதைக் கூறும் கம்பன் வரிகள் நம் உள்ளத்தையுமல்லவா குளிர வைக்கிறது.

*வெளுத்த வெண்ணகையவள் விளம்பும் ஏல்வையின்*
*ஒளித்த வெங்கனலவன் உள்ளம் உட்கினான்*
*தளிர்த்தன மயிர்ப்புறம் சிலிர்ப்பத் தன்மையால்*
*குளிர்த்தது அக்குரிசில் உடல் என்பு கூரவே*

"வெண் முத்தைப் பழிக்கும் நகையுடையாள் விளம்பிய சொற்களைக் கேட்ட அளவில் ஒளிவிட்டு எரிந்து கொண்டிருந்த அந்த அக்கினித் தேவன் உள்ளம் கூசினான். அடுத்த கணம் அனுமன் வாலில் தீய்ந்து போன ரோமங்கள் ஒளிர்ந்தன. சிலிர்த்தன ஏன்

தெரியுமா? வாலில் எலும்பு உள்ள பகுதிவரை ஏன் எலும்பும் கூட குளிர்ச்சியாய் இருக்கும் அளவிற்கு அக்னி குளிர்ந்தான். அனுமன் வாலில் நெருப்பு மட்டுமா குளிர்ந்தது இல்லை இல்லை உலகின் மிகப்பெரிய எரிகளும் குளிர்ந்தனவாம்.

*மற்றினிப் பல என் வேலை வடவனல் புவி அளாய*
*கற்றை வெம் கனலி, மற்றைக் காயத்தீ முனிவர்காக்கும்*
*முற்றுறு மும்மைச் செந்தீமுப்புரம் முருங்கச் சுட்ட*
*கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னியும் குளிர்ந்த அன்றே*

அனுமன் வாலில் இட்ட தீ மட்டுமல்ல கடலினுள் ஆழ்பகுதியில் விளங்குவதாய்க் கூறப்படும் வடவாக்னியும், புவிஎலாம் வெம்மை பரப்பும் அவ்வாதவனின் வெப்பக்கதிர்; ஒவ்வொருவர் வயிற்றிலேயும் உள்ள ஜாடராக்னி, முனிவர் போற்றும் கார்கபத்யம், ஆகவனீயம், தட்சினாக்னி ஆகிய முத்தீயும், முப்புரத்திலே முக்கணான் வைத்த அத்தீ, எல்லாமே குளிர்ந்தனவாம். அது மட்டுமல்ல வெம்மை இழையோடும் இடமெலாம் குளிர்ந்தது. பெருநெருப்பின் முன்னால் மற்றை நெருப்புகள் அடங்குவது தானே முறை. கற்பின் கனலால் மற்றைக் கனல்கள் குளிர்ந்தன. (கம்பனின் இந்த வரிகள் பின்னர் இரணியன் வதைப் படலத்தில் பிரஹ்லாதனைக் கொல்லுவான் தீயில் உய்த்த போழ்து மீண்டும் நினைவூட்டப் பெறுகிறது)

*காலவெங்கனல் கதுவிய காலையிற் கற்புடையவள் சொற்ற*
*சீல நல்லுரை சீதமிக்கடுத்தலிற் கிழியொடு நெய் தீற்றி*
*ஆல மன்னவர் கரங்கள் வயங்கெரி மடுத்தலி லனுமன்றன்*
*கூலமாமென வென்புறக் குளிர்ந்தக் குருமணித் திருமேனி*

கம்பன் இப்பாடலினால் சொல்லவந்த செய்தி குருமணித் திருமேனியனாம் பிரஹ்லாதனுக்கு அவனையழிப்பான் பொருட்டுத் தீயினில் இட்டபோது என்பு வரை அந்நெருப்பு குளிர்ந்தது என்பது தான். அது எதைப்போல் குளிர்ந்தது என்றால் "கற்புடைத் தெய்வமாம் சீதை கூறிய நல்ல உயர் சொற்களால், அனுமன் வாலில் அரக்கர்களால் வைக்கப்பட்ட தீ குளிர்ந்தது போல் குளிர்ந்தது." இதில்

சீல நல்லுரை என்ற சொற்றொடரால் "சீதோ பவ ஹனூமத" என்று வால்மீகி ராமாயணத்தின் ச்லோகங்களை நமக்கு நினைவூட்டுகிறான் கம்பன். அப்படிக் கம்பனைக் கவர்ந்த வால்மீகி ஸ்லோகங்களின் பொருளைக் காண்போம்.

அகன்ற கண்களை உடைய அந்த சீதை அனுமனுக்கு ஆசீர்வாதம் செய்ய மனங்கொண்டவளாய் அக்னியை அகத்தூய்மையுடன் வேண்டினாள்.

"கணவனுக்கு ஏற்றபடி பணிவிடை செய்தவள் நான் என்பது உண்மையானால், அவனைப் பிரிந்த காலத்திலும் அவனையே நினைந்து தவம் இருப்பது உண்மையானால், கணவனே கதியென்று வாழ்பவள் என்பது உண்மையானால் ஹே! நெருப்பே அனுமனுக்குக் குளிர்ந்து தோன்றியருள வேண்டும்.

அறிவிற் சிறந்த என் நாயகருக்கு என்னிடத்தில் கருணை என்பது சிறிதேனும் இருக்குமனால், எனக்கு மீண்டும் அவரை அடையும் பேறு இருக்குமானால் அக்னியே ஹனுமனுக்கு நீ குளுமையாக இருக்க வேண்டும்.

அறத்தின் மூர்த்தியாகிய அவர் என்னை அடைவது எண்ணி, நானும் அவரை அடைவதொன்றையே பிரார்த்தித்துக் கொண்டிருப்பதும் அது ஒன்றையே நெறியாகக் கொண்டிருப்பவளாய் அவர் அறிவாரானால் அக்னியே அனுமனுக்கு நீ குளுமையாக இருக்க வேண்டும்.

பெருந்தோளுடைய, ஸத்யஸந்தரான சுக்ரீவர் இராமன் உடன் நின்று என்னை இத்துயரத்தினின்றும் விடுவிக்க முயலுவார் என்று அனுமன் சொன்னது ஸத்யமானால் அக்னியே அனுமனுக்கு நீ குளிர்ந்து அருள வேண்டும்".

இவ்வார்த்தைகளால் அக்னியும் தன் இயல்பாம் சுடுதலை விடுத்து, குளிர்ச்சியாய் தோற்றவே அனுமன் இதுவும் இராமன் கருணையே என வியந்து தன் வாலில் இடப்பட்ட தீயை இலங்கை மாநகர்

முழுவதும் வைத்து அவ்விலங்கை எரியும்படி செய்தான். இலங்கை பற்றி எரிந்தது. அதுகண்ட அனுமன் உள்ளத்தில் உடனே ஒரு வேதனை. இலங்கை முழுவதும் எரிகிறது. ஒரு வேளை அசோகவனமும் எரிந்து அதனால் சீதைக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் நம் செயல் அனைத்தும் வீணாக அல்லவா போய்விடும் என்று சிந்தித்த அனுமன் செவிகளில்

*விட்டுயர் விஞ்சையர் வெந்தீ வட்டமுலைத்திரு வைகும்*
*புள்திரள் சோலை புறத்தும் சுட்டிலது என்பது சொன்னார்*
*வந்தவர் சொல்ல மகிழ்ந்தான். வெந்திறல் வீரன் வியந்தான்*
*உய்ந்தனென் என்ன உயர்ந்தான் பைந்தொடி தாள்கள் பணிந்தான்*

விண்ணிலே எழுந்த வித்யாதரர்கள் சொற்களாம் "இலங்கை முழுவதும் பற்றிய தீ சீதை வைகும் இடமாம் அசோக வனம் மட்டும் அங்குள்ள பறவை இனத்தோடும் சுட்டெரிக்காமல் விட்டது" என்பதைக் கேட்டு சீதையின் கற்பின் ஆற்றலை வியந்து, அவன்தன் பாதம் பணிந்து மீண்டும் இராமன் இருக்கும் இடமேகப் புரிந்தனன் பயணம்.

இராமன் இருந்த இடம் வந்த அனுமன், தான் பிராட்டியை கண்டுவந்தக் கூறிய பாங்கு அவனது சொல்லாற்றலை மட்டுமல்ல குறிப்பால் உணர்த்துதலையும் தெளிவுபடுத்தும்.

*எய்தினன் அனுமனும் எய்தி ஏந்தல்தன்*
*மொய் கழல் தொழுகிலன் முளரி நீங்கிய*
*தையலை நோக்கிய தலையன் கையினன்*
*வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்.*

எம்பெருமான் இராமன் இருக்கும் இடம் வந்த அனுமன் இராமனைத்தான் வணங்கி இருக்க வேண்டும் - ஆனால் அவன் சீதை இருக்கும் தென்திசை நோக்கித் தன் தலைக்குமேல் கைகளை கூப்பியவனாய் தரையில் விழுந்து ஸாஷ்டாங்கமாக வணங்கினான். இப்படி கம்பன் தீட்டியுள்ள வரிகள்சொல்லும் செய்திகள் "இராமா நான் சீதையைக் கண்டேன் அவள் வணங்கப்பட வேண்டிய கற்பின்

திருமகள்" என்று இராமனுக்கு குறிப்பால் உணர்த்தும் பொருட்டே. பின்னர் அனுமன்

*கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்*
*தென்திசை அலைகடல் இலங்கைத் தென்னகர்*
*அண்டர் நாயக இனித்துறத்தி ஐயமும்*
*பண்டுள துயரும் என்று அனுமன் பண்ணுவான்*

இராமா! நான் கற்பினுக்கு அணியை நீ அவனை நினைத்து துயரில் அழுந்தி கண்களில் துயரை காட்டி தனிமையில் கண்களில் நீர் ததும்ப நின்றதைக் கண்டவன் நான். அதேபோல் நின் பிரிவால் துயருற்று அத்துயரை கண்களால் வெளிப்படுத்திய சீதையின் கண்களால் நின் அன்பிற்கு ஒத்த அன்பினன் அவள். ஒருத்தி ஒருவன் என்ற உயர் கொள்கையாம் கற்பினைக் கண்ட நான் அதே கொள்கையளாம் சீதையை, நின் கற்பினுக்கணியை அவன் தன் திருக்கண்களால் கண்டேன்.தென்திசை இலங்கையில் கண்டேன் நீர் இனி பழைய துயரங்கள் சீதையை காண முடியுமா என்ற எண்ணம் இரண்டையும் விட்டுவிடுங்கள் நின்னருள் சுமந்து இலங்கை சென்ற நான் நின் தேவியின் அருள்தன்னால் மீண்டு வந்திருக்றேன் என்றால் நீங்கள் இலங்கை சென்று சீதையை மீண்டும் பெற்று அயோத்தி அடையப்போவது உறுதி எனப் பொருள் படும்படி பேசினான். மீண்டும் அனுமன்

*விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீர் இலங்கை வெற்பில்*
*நற்பெருந்தவத்துள் ஆய நங்கையைக் கண்டேன் அல்லேன்*
*இற்பிப் பென்பதொன்றும் இரும்பொறை என்பதொன்றும்*
*கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்.*

ஐயனே! வில்லேந்திய வீரராகவா! கொந்தளிக்கும் கடல்சூழ்ந்த இலங்கையில் தவக்கோலத்தில் இருநத சீதாபிராட்டியை மட்டும் கண்டேன் இல்லை. உயர்குடிபிறப்பு, பொறுமை, கறபு ஆகிய மூன்றும் ஒரே இடத்தில் மகிழ்ச்சியோடு காணப்பட்டதைக் கண்டேன். அந்த மூன்று தன்மைகளும் சீதாபிராட்டியால் பெருமையுற்றன.அகமகிழந்து

ஆடின. ஆம் குணங்கள் ஏற்றம் பெற்றன. குலமகள் ஸீதை தவத்தால் என்றால் சீதையின் பெருமையை, தவத்தை, கற்பை உயர்குடித் தன்மையை, பொறுமையை உலகறியச் செய்யும் உன்னத சொற்களால் இராமன் உள்ளத்தில்மகிழ்ச்சியை ஏற்படுத்திய அந்த அனுமனின் சொல்லாற்றல் பெண்மையை, பெண்மையின் நலத்தைப் புவியுளோர் புரிந்து கொள்ளத் துணைநிற்கும் காலத்தை வென்று எனவே அனுமன் சொலல் வல்லன் சோர்விலன் அவனை வெல்ல முடியாது. அதேபோல் அவன் அருள் பெற்று அடியார்களையும் வெல்ல முடியாது. இது கம்பன் கண்ட முடிவு. அவ்வனுமன் புகழ்பாடி அவனியில் வாழ்வோம்.



**வீராபுரம் சம்பத் தீக்ஷிதர்**
ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர்
நல்லாசிரியர் விருது பெற்றவர்

**இதுவரை வெளிவந்த நூல்கள்**

1. வரம் தரும் வரதன்
2. அறம் உரைத்த அருங்குடி மகளிர்
3. பேரருளான் பேரருள்
4. வால்மீகியின் சீரிய சிந்தனை
5. போதவிழ் பொய்கை
6. ஆண்டாள் திருப்பாவை (புதிய கண்ணோட்டம்)
7. இராமநாமத்தின் பெருமை
8. பட்டதை எழுதுகிறேன்
9. எண்ணமும், எழுத்தும்

**கலந்து கொண்ட மாநாடுகள்**

1. அகில இந்திய இராமாயண மாநாடு, பூனா
2. அகில இந்திய மஹாபாரத மாநாடு, சென்னை.

**சிறப்பு**

1. கலை இலக்கிய அன்பர்கள் அமைப்பு
2. ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீராமநவமியை முன்னிட்டு ஸ்ரீமத் இராமாயண பாராயணம்
3. ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீ ஜயந்தியை முன்னிட்டு பகவத் கீதை பாராயணம்